அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला—१४

(स्वात्मनिरूपणम्)



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா - 14

(ஸ்வாத்ம நிரூபணம்)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்

ஸ்ரீரங்கம்

1964



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिर्द्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

**कारुण्यसारसान्द्राः कांक्षितवरदानकल्पकविशेषाः ।**
**श्रीगुरुचरणकटाक्षाः शिशिराः शमयन्ति चित्तसंतापम् ॥**

ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ தக்ஷிணாம்நாய சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஸ்ரீமத் அபிநவவித்யாதீர்த்த மஹா ஸ்வாமிகள் அவர்களின் திவ்யாநுக்ரஹமஹிமையால் "ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவின்" 14-வது மலர் மலர்ந்து தனது தைவிக மணத்தை எங்கும் பரவச்செய்ய நேயர்களைத் தேடி வருகிறது. இதில் 154 சுலோகங்கள்கொண்ட "ஸ்வாத்ம நிரூபணம்" என்னும் பிரகரணம் முழுவதும் வழக்கம்போல தமிழில் பதவுரை, பொழிப்புரை, விசேஷக் கருத்துரை களுடன் வெளிவந்திருக்கிறது. இதன் கடைசியில் '**स्वात्म-निरूपणमेतत्प्रकरणमन्तर्विचिन्त्यतां सद्भिः**' (ஸ்வாத்ம நிரூபணம் என்ற இந்த ப்ரகரணம் ஸாதுக்களால் மனதில் சிந்தனம் செய்யப்படட்டும்) என்று ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் அவர்களே இதன் பெயரைக் கூறியிருக்கிறார்.

தேஹம், இந்திரியம் முதலியவற்றையும், பத்னீ புத்ராதிகளையும், நாம் ஆத்மா என்று ப்ரமத்தால் எண்ணி வியவஹாரம் செய்தபோதிலும் அவை கௌணாத்மா வாகவோ, மித்யாத்மாவாகவோ ஆகுமே தவிர முக்யாத்மா வல்ல. ஸச்சிதானந்த வஸ்துதான் தனது முக்யமான ஆத்மா. 'நான்' என்ற பதத்தால் குறிக்கப்படும் இந்த தனது ஆத்ம ஸ்வரூபத்தை நன்கு நிரூபணம் செய்வதால் இதற்கு இப்பெயர் அமைந்துள்ளது. இதை 3-வது சுலோகத்தில் கூறுகிறார். 'நான்' என்பதன் பொருளை சிஷ்யனின் அனுபவவாயிலாக அகாராதி க்ரமத்தில் 40 சுலோகங்களால் எடுத்துக்காட்டுவது இப்பிரகரணத்தின் தனிச் சிறப்பாகும்.

ஞான ஸாதனங்களெல்லாம் அமையப்பெற்று தன்னைச் சரணமடைந்த சிஷ்யனுக்கு ஸ்ரீ குருவானவர் மஹா வாக்யார்த்தத்தைக் காட்டி ஆத்ம தத்வத்தை உபதேசிக்கிறார். உடன் ஆத்மானுபவம் பெற்ற சிஷ்யன் தனது அனுபவத்தை விரிவாகக்கூறி கடைசியில் 4 சுலோகங்களால் ஸத்குரு மஹிமையை நன்கு எடுத்துக் காட்டுகிறான். குருவின் உபதேசத்தின் நடுவிலும் (சுலோகம் 24, 41, 42, 43) எத்தனை ஸாதனங்கள் இருந்தபோதிலும் குருகிருபை இல்லாவிட்டால் ஆத்மானுபவம் ஏற்படாது என்பதை உறுதியாகக் கூறுகிறார். ஆத்மானுபவம்மட்டுமென்ன? குரு கிருபை இருந்தால்தான் இடைஞ்சலில்லாமல் நல் வழியில் செல்லமுடியும். மங்கள சுலோகமாக அமைந்துள்ள முதலிரண்டு சுலோகங்களும் குருவின் பெருமையைக் கூறுகின்றன.

திருக்குற்றால க்ஷேத்திரத்தில் க்ரோதி-ஸூ ஆவணி-மீ கணபதி வாக்யார்த்த ஸபை நடைபெறும் ஸந்தர்ப்பத்தில் ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குருவின் திவ்ய சரணாரவிந்தங்களில் பக்திப் பெருக்குடன் இம்மலர் ஸமர்ப்பிக்கப்படுகிறது.

K. V. சுப்பரத்னம் அய்யர்,
*பொதுக் காரியதர்சி,*
*அகில்பாரத சங்கரஸேவா ஸமிதி.*


விஷயாநுக்ரமணிகை

|| ஸ்ரீ: ||

# || स्वात्मनिरूपणम् ||

# ஸ்வாத்ம நிரூபணம்

———o———

*[ஸ்வாத்மநிரூபணம் என்னும் இப்பிரகரணம் 154 சுலோகங்கள் கொண்டது. '**स्वात्मनिरूपणमेतत्प्रकरणमन्तर्वि-चिन्त्यतां सद्भिः**' என்ற கடைசி சுலோகத்தில் இந்த பிரகரணத்தின் பெயரையும் இதைச் சிந்தனம் செய்வதால் வரும் பலனையும் ஆசார்யாள் காட்டியிருக்கிறார். 3வது சுலோகத்தில் இந்தப் பெயர் ஏற்பட்டதன் காரணத்தைக் கூறுகிறார், 4வது சுலோகம் முதல் 103வது சுலோகம் வரை குருவின் உபதேசமாகவும், 105வது சுலோகம் முதல் 152வது சுலோகம் வரை சிஷ்யன் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் கூறுவதாகவும், அமைந்துள்ளது. சிஷ்யன் கூறும் சுலோகங்கள் அகாராதி க்ரமத்தில் அமைந்திருப்பது இப்பிரகரணத்தின் தனிச்சிறப்பாகும். ஆசார்ய மஹிமை குருவின் உபதேசத்தில் காணப்படுவதுடன் சிஷ்யனும் விரிவாக இதைக் காட்டுகிறான். பஞ்சகோசங்களை விலக்கி தானே ஸ்வயம்பிரகாசமான ஆத்மா என்று காட்டி 'தத்த்வமஸி' மஹாவாக்யத்தின் பொருளை விரிவாக குரு உபதேசிக்கிறார். 'பிரபஞ்சம் கல்பிதம், அதிஷ்டானமான ப்ரஹ்மமே ஸத்யம், குருவினாலும் உபநிஷத்தாலும் தான் அறியமுடியும், உபநிஷத்தாத்பர்யம அத்வைதத்தில்தான், ஜீவன் எப்பொழுதுமே ப்ரஹ்மம்தான், அக்ஞானத்தால் தெரியவில்லை, ஞானம் ஒன்றுதான் ஸாதனம இது முதலான பல கருத்துக்களை குரு உபதேசிக்கிறார். இந்தப் பிரகரணத்தை சிந்தனம் செய்தால் மோஹம் விலகி ஸம்ஸார ஸாகரத்திலிருந்து கடைத்தேறலாம்.]*

குருவணக்கம் :—

श्रीगुरुचरणद्वन्द्वं वन्देऽहं मथितदुःसहद्वन्द्वम् ।
भ्रान्तिग्रहोपशान्तिं पांसुमयं यस्य भसितमातनुते ॥ १ ॥

ஸ்ரீ குருசரண த்வந்த்வம் வந்தேऽஹம் மதித
துஸ்ஸஹ த்வந்த்வம் ।
ப்ராந்தி க்ரஹோப ஶாந்திம் பாம்ஸுமயம் யஸ்ய
பஸிதமாதநுதே ॥

अहं-நான், श्रीगुरुचरणद्वन्द्वं-சோபையுடன் கூடிய ஸத்குருநாதரின் இருதிருவடிகளையும், वन्दे-வணங்குகிறேன். मथितदुःसहद्वन्द्वं-பொறுக்கமுடியாத (ஸுகம் - துக்கம் முதலான) த்வந்த்வங்களை (இரட்டைகளை) அழிக்கின்றதான, यस्य-எந்தத்திருவடியின், पांसुमयं-தூளிமயமான, भसितं-விபூதி, भ्रान्तिग्रहोपशान्तिं-ப்ராந்தி (விபரீதஞானம்) ஆகிற துஷ்டக்ரஹங்களின் சாந்தியை, आतनुते-செய்கிறதோ.

ஸ்ரீமத் குருநாதரின் இரண்டு பாதங்களையும் நான் நமஸ்கரிக்கிறேன். அவைகளே ஸஹிக்கமுடியாத ஸுகம் துக்கம் முதலான இரட்டைகளை நசுக்கியிருக்கின்றன. அவைகளின் தூளியாகிற விபூதி பிராந்தியாகிற துஷ்ட கிரஹத்தை சமனம் செய்து விடுகிறது. (1)

देशिकवरं दयालुं वन्देऽहं निहतनिखिलसंदेहम् ।
यच्चरणद्वयमद्वयमनुभवमुपदिशति तत्पदस्यार्थम् ॥ २ ॥

தேஶிகவரம் தயாளும் வந்தேऽஹம் நிஹத நிகில
ஸந்தேஹம் ।
யச்சரண த்வயமத்வயமனுபவமுபதிஶதி
தத்பதஸ்யார்த்தம் ॥

अहं-நான், निहतनिखिलसन्देहम्-எல்லா ஸம்சயங்களையும் போக்கடித்த, दयालुं-கிருபையை ஸ்வபாவமாகக்கொண்ட, देशिकवरं-ஸத்குரு சிரேஷ்டரை, वन्दे-நமஸ்கரிக்கிறேன். यच्चरणद्वयं-எவருடைய இருதிருவடிகளும், तत्पदस्य- 'தத்' பதத்தின், अर्थं-பொருளான, अद्वयं-இரண்டற்ற, अनुभवं-ப்ரஹ்மானுபவத்தை, उपदिशति-உபதேசிக்கிறதோ.

தயாளுவான தேசிகோத்தமரை நமஸ்கரிக்கிறேன். அவர் ஸகல ஸந்தேஹங்களையும் போக்கடித்தவர்.

அவருடைய இரு பாதங்களும் தத் (அது) என்கிற வார்த்தையின் அர்த்தமான இரண்டற்ற (பிரஹ்மத்தின்) அனுபவத்தை உபதேசம் செய்கின்றன, (2)

ஆத்மஸ்வரூபம் :—

संसारदावपावकसंतप्तः सकलसाधनोपेतः ।
आत्मनिरूपणनिपुणैर्वाक्यैः शिष्यः प्रबोध्यते गुरुणा ॥ ३ ॥

ஸம்ஸார தாவ பாவக ஸந்தப்த: ஸகல ஸாதனோபேத: ।
ஆத்ம நிரூபண நிபுணைர் வாக்யை: ஶிஷ்ய:
ப்ரபோத்யதே குருணா ॥

संसारदावपावकसन्तप्तः–ஸம்ஸாரமாகிற காட்டுத்தீயினால் மிகுந்த தாபத்தை அடைந்தவனும், सकलसाधनोपेतः–எல்லா ஸாதனங்களுடனும் கூடினவனுமான, शिष्यः–சிஷ்யன், गुरुणा–ஆசார்யனால், आत्मनिरूपणनिपुणैः–ஆத்மஸ்வரூபத்தை எடுத்துக்காட்டுவதில் சக்தியுள்ள, वाक्यैः–வாக்கியங்களால், प्रबोध्यते–அறிவுறுத்தப்படுகிறான்.

ஸம்ஸாரமாகிற காட்டுத்தீயினால் மிகவும் தாபத்தை அடைந்த சிஷ்யன் (ஆத்ம ஞானத்திற்கு அவசியம் வேண்டிய) எல்லா ஸாதனங்களோடு கூடினவனாகி குருவினால் ஆத்மதத்வத்தை நன்கு எடுத்துச்சொல்ல வல்லமையுள்ள வாக்கியங்களால் நன்கு போதிக்கப் படுகிறான். (3)

अस्ति स्वयमित्यस्मिन्नर्थे कस्यास्ति संशयः पुंसः ।
अत्रापि संशयश्चेत् संशयिता यः स एव भवसि त्वम् ॥ ४ ॥

அஸ்தி ஸ்வயமித்யஸ்மின்னர்த்தே
கஸ்யாஸ்தி ஸம்ஶய: பும்ஸ: ।
அத்ராபி ஸம்ஶயச்சேத் ஸம்ஶயிதா ய: ஸ ஏவ பவஸி த்வம்॥

स्वयं–தான், अस्ति–இருக்கிறான், इति–என்ற, अस्मिन्-अर्थे-இந்த விஷயத்தில், कस्य–எந்த, पुंसः–புருஷனுக்கு, संशयः–ஸந்தேஹம், अस्ति–இருக்கிறது? अत्रापि–இந்த

விஷயத்திலும், **संशयश्चेत्**-ஸந்தேஹம், ஏற்படுமேயானால், **संशयिता**-ஸந்தேஹப்படுகிறவன், **यः**-எவனோ, **स एव**-அவனாகவே, **त्वं**-நீ, **भवसि**-இருக்கிறாய்.

நான் இருக்கிறேன் என்கிற இந்த விஷயத்தில் யாரேனும் மனுஷ்யனுக்கு ஸந்தேஹம் உண்டா? இதிலும் ஸந்தேஹம் உண்டு என்றால் ஸந்தேஹப்படுகிறவன் யாரோ அவனேதான் நீ. (4)

**नाहमिति वेत्ति योऽसौ सत्यं ब्रह्मैव वेत्ति नास्तीति ।**
**अहमस्मीति विजानन् ब्रह्मैवासौ स्वयं विजानाति ॥ ५ ॥**

நாஹமிதி வேத்தி யோऽஸௌ ஸத்யம் ப்ரஹ்மைவ
வேத்தி நாஸ்தீதி ।
அஹமஸ்மீதி விஜானன் ப்ரஹ்மைவாஸௌ ஸ்வயம்
விஜாநாதி ॥

**अहं**-நான், **न**-இல்லை, **इति**-என்று, **यः**-எவன், **वेत्ति**-அறிகிறானோ, **असौ**-அவன், **सत्यं**-உண்மையான, **ब्रह्मैव**-ப்ரஹ்மமே, **नास्ति**-இல்லை, **इति**-என்று, **वेत्ति**-அறிகிறான். **अहं**-நான், **अस्मि**-இருக்கிறேன், **इति**-என்று, **विजानन्**-அறிகிற, **असौ**-அவன், **स्वयं**-தான், **ब्रह्मैव**-ப்ரஹ்மத்தையே, **विजानाति**-அறிந்து கொள்கிறான்.

எவன் ஒருவன் நான் இல்லை என்று நினைக்கிறானோ, அவன் உண்மையான பிரஹ்மமே இல்லை என்று அறிகிறான். நான் இருக்கிறேன் என்று அறிகிறவன், பிரஹ்மத்தையே தான் அறிந்தவனாகிறான். (5)

**ब्रह्म त्वमेव तस्मान्नाहं ब्रह्मेति मोहमात्रमिदम् ।**
**मोहेन भवति भेदः क्लेशाः सर्वे भवन्ति तन्मूलाः ॥ ६ ॥**

ப்ரஹ்ம த்வமேவ தஸ்மாத் நாஹம் ப்ரஹ்மேதி
மோஹமாத்ரமிதம் ।
மோஹேந பவதி பேத: க்லேஶா: ஸர்வே பவந்தி தன்மூலா: ॥

त्वं-நீ, ब्रह्मैव-ப்ரஹ்மம்தான். तस्मात्-ஆகையால், अहं-நான், न ब्रह्म-ப்ரஹ்மமில்லை, इति इदं-என்ற இது, मोहमात्रम्-அறியாமைதான். मोहेन-அறியாமையால், भेदः-வேற்றுமை भवति-ஏற்படுகிறது तन्मूलाः-அந்த வேற்றுமையின் காரணமாக, सर्वे क्लेशाः-எல்லாத்துன்பங்களும், भवन्ति-ஏற்படுகின்றன.

நீ பிரஹ்மம்தான் ஆகையால் நான் பிரஹ்மம் இல்லை என்பது வெறும் மோஹமேயாகும் மோஹத்தினால் வேற்றுமை ஏற்படுகிறது. வேற்றுமை காரணமாக எல்லா கிலேசங்களும் உண்டாகின்றன. (6)

ஐந்து கோசங்களும் ஆத்மாவல்ல :—

न क्लेशपञ्चकमिदं भजते कृतकोशपञ्चकविवेकः ।
अत एव पञ्च कोशान् कुशलधियः संततं विचिन्वन्ति ॥ ७ ॥

ந க்லேஶ பஞ்சகமிதம் பஜதே க்ருதகோஶ பஞ்சக விவேக: ।
அத ஏவ பஞ்ச கோஶான் குஶலதிய: ஸந்ததம்
விசின்வந்தி ॥

कृतकोशपञ्चकविवेकः-ஐந்து கோசங்களையும் பிரித்துத் தெரிந்துகொண்டவன், इदं-இந்த, क्लेशपञ्चकं-ஐந்து விதமான கிலேசங்களை, न भजते-அடைகிறதில்லை. अत एव-ஆகையினாலேயே, कुशलधियः-புத்தித்திறமையுள்ளவர்கள், संततं-எப்பொழுதும், पञ्च कोशान्-ஐந்து கோசங்களை, संततं-எப்பொழுதும், विचिन्वन्ति-விசாரிக்கிறார்கள்.

(அவித்யா, அஸ்மிதா, ராகம், த்வேஷம், அபிநிவேசம்-அறியாமை, அஹங்காரம், ஆசை, வெறுப்பு, பற்று என்னும்) இந்த ஐந்து கிலேசங்களையும் ஐந்து கோசங்களின் (அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம்) தன்மையை பகுத்து அறிந்தவன் அடைவது இல்லை. இதனாலேயே நல்ல புத்தியுள்ளவர்கள் இடைவிடாமல் ஐந்து கோசங்களைப்பற்றி ஆலோசிக்கிறார்கள். (7)

**अन्नप्राणमनोमयविज्ञानानन्दपञ्चकोशानाम् ।**
**एकैकान्तरभाजां भजति विवेकात् प्रकाशतामात्मा ॥ ८ ॥**

அன்ன ப்ராண மநோமய விஜ்ஞானானந்த பஞ்சகோஶாநாம் |
ஏகைகாந்தரபாஜாம் பஜதி விவேகாத் ப்ரகாஶதாமாத்மா ||

**एकैकान्तरभाजां**-ஒன்றிற்குள் ஒன்ருக இருக்கிற, **अन्नप्राणमनोमयविज्ञानानन्दपञ्चकोशानां** - அன்னமயம், ப்ராண மயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம், என்ற ஐந்து கோசங்களையும், **विवेकात्**-பிரித்துத் தெரிந்துகொள்வதால், **आत्मा**-ஆத்மா, **प्रकाशतां**-ப்ரகாசமாயிருக்கும் தன்மையை, **भजति**-அடைகிருன்.

ஒன்றுக்குள் ஒன்ருயிருக்கிற அன்னமயம், பிராண மயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம், என்கிற ஐந்து கோசங்களையும் பிரித்துப்பார்த்தால் ஆத்மா பிரகாச மாகத் தெரியும். (8)

(அ) அன்னமயகோசம் (சரீரம்) ஆத்மாவல்ல :—

**वपुरिदमन्नमयाख्यः कोशो नात्मा जडो घटप्रायः ।**
**प्रागुत्पत्तेः पश्चात् तदभावस्यापि दृश्यमानत्वात् ॥ ९ ॥**

வபுரிதமந்நமயாக்ய: கோஶோ நாத்மா ஜடோ கடப்ராய: |
ப்ராகுத்பத்தே: பச்சாத் ததபாவஸ்யாபி
த்ருச்யமானத்வாத் ||

**इदं**-இந்த, **वपुः**-சரீரம், **अन्नमयाख्यः**-அன்னமயம் என்று பெயருள்ள, **कोशः**-கோசம். **घटप्रायः**-குடத்திற்கொப்பான **जडः**-ஜடமான (இது), **उत्पत्तेः प्राक्**-உண்டாவதற்கு முன்னும், **पश्चात्**-நாசத்திற்குப் பின்னும், **तदभावस्यापि**-அதன் இல்லாமையும், **दृश्यमानत्वात्** - அறியப்படுகிற படியால் **न आत्मा**-ஆத்மா அல்ல.

இந்த சரீரம்தான் அன்னமயம் என்கிற கோசம். இது குடம் மாதிரியே ஜடமாயிருப்பதால் (ஞானஸ்வரூபியான)

ஆத்மா அல்ல. மேலும் இது பிறப்பதற்கு முன்னாலும் (இறந்ததற்குப்) பின்னாலும் இது இல்லையென்று அறியப் படுகிறபடியால் ( இது நித்யஸ்வரூபியான ஆத்மா அல்ல.)

[ஆத்மா சேதனம், சரீரமோ அசேதனம் (ஜடம்). பிறப்பு இறப்பு இல்லாமல் எப்பொழுதும் உள்ளது ஆத்மா. உண்டாகி அழிந்துபோகும் சரீரமோ உத்பத்திக்கு முன்பும் நாசத்திற்குப் பின்னும் இல்லை. ஆகவே ஒன்றுக்கொன்று எதிரிடையாயிருப்பதால் அன்னமய கோசமான சரீரம் ஆத்மாவல்ல]. (9)

(அ) பிராணமயகோசம் ஆத்மாவல்ல :—

कोशः प्राणमयोऽयं वायुविशेषो वपुष्यवच्छिन्नः ।
अस्य कथमात्मता स्यात् क्षुत्तृष्णाभ्यामुपेयुषः पीडाम् ॥ १० ॥

கோஶ: ப்ராணமயோऽயம் வாயுவிஶேஷோ வபுஷ்யவச்
சின்ந: ।
அஸ்ய கதமாத்மதா ஸ்யாத் க்ஷுத்த்ருஷ்ணாப்யாமுபேயுஷ:
பீடாம் ॥

वपुषि-சரீரத்தில், अवच्छिन्नः-கட்டுப்பட்ட, वायुविशेषः-ஒர்வாயுதான், अयं-இந்த, प्राणमयः कोशः-பிராணமயகோசம். क्षुत्तृष्णाभ्यां-பசி தாகங்களால், पीडां-துன்பத்தை, उपेयुषः-அடைகின்ற, अस्य-இந்த பிராணனுக்கு, आत्मता-ஆத்மத் தன்மை, कथं स्यात्-எப்படி ஏற்படும்?

இந்த பிராணமய கோசம் சரீரத்திற்குள் அடைபட்ட ஒருவித வாயுதான். இது பசி, தாஹங்களால் பீடிக்கப்படு கிறது. இது எப்படி (வியாபகமாயும் பசி தாஹத்திற்கு மேல்பட்டதாயுமுள்ள) ஆத்மாவாகும்?

[பஞ்சபூதங்களில் ஒன்றான வாயுவின் அம்சம் பிராணன். ஆத்மாவோ பஞ்சபூதங்களுக்கு அப்பால் பட்டது. பிராணன் சரீரத்திற்குள் உள்ளதே தவிற வெளியில் இல்லை. ஆத்மாவோ எங்கும் உள்ளது. பிராணனுக்கு பசிதாஹங்

கள் உண்டு ஆத்மாவுக்கு அவை கிடையாது. ஆகையால் பிராணனும் ஆத்மாவல்ல] (10)

(அ) மனோமயகோசம் ஆத்மாவல்ல :—

कुरुते वपुष्यहंतां गेहादौ यः करोति ममतां च ।
रागद्वेषविधेयो नासावात्मा मनोमयः कोशः ॥ ११ ॥

குருதே வபுஷ்யஹந்தாம் கேஹாதௌ ய: கரோதி மமதாம் ச|
ராகத்வேஷ விதேயோ நாஸாவாத்மா மனோமய: கோஶ: ||

**यः**-எவன், **वपुषि**-உடலில், **अहंतां**-'நான்' என்ற எண்ணத்தை, **कुरुते**-செய்கிறதோ, **गेहादौ**-வீடுமுதலியவற்றில் **ममतां च**-'என்னுடையது' என்ற எண்ணத்தையும், **करोति**-செய்கிறதோ, **रागद्वेषविधेयः**-விருப்பு வெறுப்புகளுக்கு உட்பட்ட, **असौ**-அந்த **मनोमयः कोशः**-மனோமயகோசம், **न आत्मा**-ஆத்மாவல்ல.

சரீரத்தில் 'நான்' என்கிற எண்ணத்தையும், வீடு முதலானவற்றில் 'என்னுடையது' என்கிற எண்ணத்தையும் செய்கிறதாயும் விருப்பு வெறுப்புகளுக்கு உள்பட்டதாயுமிருக்கிற இந்த மனோமய கோசம் (இவைகளால் கொஞ்சமேனும் தீண்டப்படாத) ஆத்மா அல்ல.

[மனமானது சரீரத்தை நான் என்றும் வீடு, மனைவி முதலியவற்றை எனது என்றும் அபிமானம் கொள்கிறது. இரண்டற்ற ஆத்மாவுக்கோ அபிமானம் என்பதே கிடையாது. மேலும் தனக்கு வேண்டியவற்றில் விருப்பும், வேண்டாதவற்றில் வெறுப்பும் கொள்கிறது மனம். ஆத்மாவுக்கோ ராகத்வேஷங்கள் கிடையாது. ஆதலால் மனமும் ஆத்மாவல்ல.] (11)

(அ) விக்ஞானமயகோசம் ஆத்மாவல்ல :—

सुप्तौ स्वयं विलीना बोधे व्याप्ता कलेबरं सकलम् ।
विज्ञानशब्दवाच्या चित्प्रतिबिम्बो न बुद्धिरप्यात्मा ॥ १२ ॥

ஸுப்தௌ ஸ்வயம் விலீநா போதே வ்யாப்தா களேபரம்
ஸகலம் ।
விஜ்ஞான ஶப்த வாச்யா சித்ப்ரதிபிம்போ
ந புத்திரப்யாத்மா ॥

सुप्तौ–தூக்கத்தில், स्वयं–தானுகவே, विलीना–மறைந்து விடுகிறதும், बोधे–விழிப்பில், सकलं कलेवरं–சரீரம் முழுவதும், व्याप्ता– பரவியிருக்கிறதும், चित्प्रतिबिम्बः– சைதன்யத்தின் பிரதிபிம்பமாக உள்ளதும், विज्ञानशब्दवाच्या–'விஜ்ஞானம்' என்றசொல்லால் கூறப்படுகிறதுமான, बुद्धिरपि–புத்தியும், न आत्मा– ஆத்மா அல்ல.

விக்ஞான சப்தத்திஞல் சொல்லப்படுகிற புத்தி சைதன்யத்தின் பிரதிபிம்பமேயாகும். அது தூங்கும்போது தானுகவே லயத்தை அடைந்து விடுகிறது. விழித்திருக்கும் போது சரீரம் பூராவையும் வியாபித்திருக்கிறது. இதுவும் கூட (சைதன்ய ஸ்வரூபமாயும் ஸர்வ வியாபகமாயுமுள்ள) ஆத்மா அல்ல.

[சைதன்ய பிரதிபிம்பத்துடன் கூடிய புத்திதான் விஞ்ஞானமய கோசம் என்பது இது விழித்துக்கொண்டிருக்கும் பொழுது சரீரம் முழுவதும் பரவியிருப்பதால் எல்லா உணர்ச்சிகளும் ஏற்படுகின்றன. தூக்கத்தில் இது லயமடைந்து விடுவதால் நமக்கு ஒன்றும் தெரிவதில்லை. ஸர்வ வியாபகமாயும் எப்பொழுதும் ஞான ஸ்வரூபமாயுமுள்ள ஆத்மாவாக எப்படி புத்தி ஆகமுடியும்?] (12)

(அ) ஆனந்தமயகோசம் ஆத்மாவல்ல:—

सुप्तिगतैः सुखलेशैरभिमनुते यः सुखी भवामीति ।
आनन्दकोशनामा सोऽहंकारः कथं भवेदात्मा ॥ १३ ॥

ஸுப்திகதை: ஸுகலேஶைரபிமனுதே ய: ஸுகீ பவாமீதி ।
ஆநந்தகோஶநாமா ஸோऽஹங்கார: கதம் பவேதாத்மா ॥

**सुप्तिगतैः**-தூக்கத்திலுள்ள, **सुखलेशैः** மிகவும் ஸ்வல்ப மான ஸுகங்களால், **यः**-எவன், **सुखी भवामीति**-ஸுகமுள்ள வனாக இருக்கிறேன் என்று, **अभिमनुते**-அபிமானம் கொள் கிறானோ, **सः**-அந்த, **आनन्दकोशनामा**-ஆனந்தமய கோசம் என்ற பெயருள்ள, **अहङ्कारः**-அஹங்காரம், **कथं**-எப்படி, **आत्मा**-ஆத்மாவாக, **भवेत्**-ஆகும்?

தூக்கத்தில் தோன்றும் ஸுகலேசங்களை வைத்துக் கொண்டு நான் ஸுகியாயிருக்கிறேன்என்று அபிமானிக்கிற அஹங்காரம் ஆனந்தமய கோசம் என்ற பெயருள்ளது. அது எப்படி (நிரதிசயமான ஆனந்தஸ்வரூபியான) ஆத்மா வாகும்?

[நல்ல தூக்கத்தில் ஸுகத்தை அனுபவிக்கிறவன் ஆனந்தமயன். ஸுஷுப்தி ஸுகம் மிகவும் ஸ்வல்பம். அதுவும் அப்பொழுது நன்றாகத்தெரிவதில்லை. விழித்துக் கொண்டபிறகுதான் ஞாபகத்திற்கு வருகிறது. ஆத்மாவோ எல்லையற்ற ஆனந்த ப்ரகாசஸ்வரூபம். அதனால் ஆனந்த மயனும் ஆத்மாவல்ல] (13)

ஆத்மா ஞான விஷயமல்ல:—

यः स्फुरति विम्बभूतः स भवेदानन्द एव सकलात्मा ।
प्रागूर्ध्वमपि च सत्त्वादविकारित्वादबाध्यमानत्वात् ॥ १४ ॥

ய: ஸ்புரதி பிம்பபூத: ஸ பவேதானந்த ஏவ ஸகலாத்மா ।
ப்ராகூர்த்வமபி ச ஸத்வாதவிகாரித்வாதபர்த்யமாநத்வாத் ॥

**यः**-எது, **विम्बभूतः**-பிம்பமாக இருந்து கொண்டு, **स्फुरति**-பிரகாசிக்கிறதோ, **सः**-அந்த, **आनन्द एव**-ஆனந்தம் தான், **प्राक्**-முன்னும், **ऊर्ध्वमपि**-பின்னும், **सत्वात्**-இருப்ப தாலும், **अविकारित्वात्**-மாறுதல் அடையாததாலும், **अबाध्यमानत्वाच्च**-பாதிக்கப் படாமலிருப்பதாலும், **सकलात्मा**-எல்லாவற் றிற்கும் ஆத்மாவாக, **भवेत्**-ஆகும்.

எது (பிரதிபிம்பமாயில்லாமல்) பிம்பமாகவே இருந்து கொண்டு, (ஆனந்தமயமாயில்லாமல்) ஆனந்தமாகவே இருந்து கொண்டு, (அளவிற்கு உட்படாமல்) எல்லா வற்றிற்கும் ஆத்மாவாக பிரகாசிக்கிறதோ ( அதுவே தான் ஆத்மா ). முன்னுலேயும் பிற்பாடும் இருந்து வருவதனுலும், எவ்வித மாறுதலுமற்றிருப்பதனுலும், எப்பொழுதும் பாதிக்கப்படாமலிருப்பதனுலும் ( அதுவேதான் ஆத்மா )

अन्नमयादेरस्मादपरं यदि नानुभूयते किंचित् ।
अनुभविताऽन्नमयादेरस्तीत्यस्मिन् न कश्चिदपलापः ॥ १५ ॥

அந்நமயாதேரஸ்மாதபரம் யதி நாநுபூயதே கிஞ்சித் ।
அநுபவிதாऽந்நமயாதேரஸ்தீத்யஸ்மின் ந கச்சிதபலாப: ॥

अस्मात्-இந்த, अन्नमयादेः-அன்னமயம் முதலியவற்றைக் காட்டிலும், अपरं किञ्चित्-வேறுஒன்றும், यदि नानुभूयते-அனுபவிக்கப்படாவிட்டாலும், अन्नमयादेः-அன்னமயம் முத லியவற்றை, अनुभविता-அனுபவிக்கிறவன், अस्ति- இருக் கிருன், इत्यस्मिन्-என்ற இந்த விஷயத்தில், कश्चित्-ஒருவித மான, अपलापः-மறுப்பும், न-கிடையாது.

இந்த அன்னமயம் முதலான (ஐந்து கோசங்களுக்கு) வேருக யாதொன்றும் அனுபவிக்கப்படவில்லையே யென்றுலும், அன்னமயம் முதலானவைகளை அனுபவிக் கிறவனுக ஒருவன் இருக்கிறவிஷயத்தில் எவ்வித மறுப்புக்கும் இடமில்லை.

[அன்னமயம் முதலான ஐந்து கோசங்களையும் நாம் நன்கு அறிந்துகொள்வதால் இவைகளை அறிகிறவன் ஒருவன் இவைகளைக்காட்டிலும் வேருக இருக்கவேண்டு மென்று தெரிகிறது] (15)

स्वयमेवानुभवत्वाद्यद्यप्येतस्य नानुभाव्यत्वम् ।
सकृदप्यभावशङ्का न भवेद्बोधस्वरूपसत्तायाः ॥ १६ ॥

ஸ்வயமேவாநுபவத்வாத் யத்யப்யேதஸ்ய நாநுபாவ்யத்வம்
ஸக்ருதப்யபாவ ஶங்கா ந பவேத் போத ஸ்வரூபஸத்தாயா:||

**स्वयमेव**-தானே, **अनुभवत्वात्**-அநுபவரூபமாயிருப்பதால், **एतस्य**-இந்த ஆத்மாவிற்கு, **अनुभाव्यत्व**-அனுபவிக்கத்தகுந்தவனுயிருக்கும் தன்மை, **यद्यपि न**-இல்லாவிட்டாலும், **बोधस्वरूपसत्तायाः**-ஞானஸ்வரூபமான ஸத்தைக்கு, **सकृदपि**- ஒரு தடவையாவது, **अभावशंका**-இல்லையோ என்ற ஸந்தேஹம், **न भवेत्**-ஏற்படாது.

இவன் தானே அநுபவரூபமாயிருப்பதால் இவனுக்கு அனுபவிக்கப்படும் தன்மை கிடையாதென்பது வாஸ்தவமானுலும் ஞான ஸ்வரூபனுக இருப்பவனுக்கு இருப்பு உண்டா இல்லையா என்ற ஸந்தேஹம் ஒருவிதத்திலும் ஏற்பட முடியாது.

[எல்லாவற்றையும் அறியும் ஆத்மா வேருென்ருல் அறியப்படாததால் அதை இல்லை என்று சொல்லமுடியாது. ஸத்தாகவும் சித்தாகவும் தானே விளங்குகின்ற ஆத்மா எப்படி இல்லாமலிருக்கக்கூடும்?] (16)

अनुभवति विश्वमात्मा विश्वेनासौ न चानुभूयेत ।
न खलु प्रकाश्यतेऽसौ विश्वमशेषं प्रकाशयन् भानुः ॥ १७ ॥

அநுபவதி விச்வமாத்மா விச்வேநாஸௌ ந சாநுபூயேத |
ந கலு ப்ரகாச்யதேऽஸௌ விச்வமஶேஷம் ப்ரகாஶயன்
பானு: ||

**आत्मा**-ஆத்மா, **विश्वं**-பிரபஞ்சத்தை, **अनुभवति**-அனுபவிக்கிருன். **असौ**-அந்த ஆத்மா, **विश्वेन**-பிரபஞ்சத்திருல், **न च अनुभूयेत**-அனுபவிக்கப்படுவதில்லை. **अशेषं विश्वं**-பிரபஞ்சம் முழுவதையும், **प्रकाशयन्**- பிரகாசித்துக்கொண்டிருக்கிற, **असौ भानुः**-அந்த ஸூரியன், **न खलु प्रकाश्यते**-(வேருென்ருல்) பிரகாசிக்கப்படுகிறதில்லையல்லவா!

பிரபஞ்சத்தை ஆத்மா அனுபவிக்கிறார். பிரபஞ்சத்தினால் அவர் அனுபவிக்கப்படுவதில்லை. பிரபஞ்சம் பூராவையும் பிரகாசிக்கும்படிச் செய்யும் இந்த ஸூர்யன் பிரகாசிக்கப் படுகிறதில்லையே !

[தான் வேறென்றால் அறியப்படாவிட்டாலும் எல்லாவற்றையும் அறிகின்ற ஆத்மா ஒன்று உள்ளது என்பதற்கு திருஷ்டாந்தம் ஸூரியன். எல்லாவற்றையும் காட்டுகின்ற ஸூர்யனைப் பார்க்க வேறு வெளிச்சத்தைத் தேடுவதில்லை. அது தானே தான் பிரகாசிக்கிறது.] (17)

(அ) ப்ரஹ்மம் அபரோக்ஷம் :—

तदिदं तादृशमीदृशमेतावत्तावदिति च यन्न भवेत् ।
ब्रह्म तदित्यवधेयं नो चेद्विषयो भवेत् परोक्षं च ॥ १८ ॥

ததிதம் தாத்ருஶமீத்ருஶமேதாவத் தாவதிதி சயந்நபவேத்।
ப்ரஹ்ம ததித்யவதேயம் நோ சேத் விஷயோ பவேத்
பரோக்ஷம் ச ॥

तत्–அது, इदं–இது, तादृशं–அப்படிப்பட்டது, ईदृशं–இப்படிப்பட்டது, एतावत्–இவ்வளவு, तावत्–அவ்வளவு, इति च என்பதாக, यत्–எது, न भवेत्–ஆகாதோ, तत्–அது, ब्रह्म–ப்ரஹ்மம், इति–என்று, अवधेयं–தெரிந்து கொள்ள வேண்டும். नो चेत्–இப்படியில்லாவிட்டால் (ப்ரஹ்மம்) विषयः–விஷயமாகவும் (அறியப்படும் வஸ்துவாகவும்) परोक्षं च–பரோக்ஷமாகவும், भवेत्–ஆகிவிடும்.

"அது, இது, அப்படிப்பட்டது, இப்படிப்பட்டது, இவ்வளவு, அவ்வளவு" என்று எது ஆகாதோ அதுவே பிரஹ்மமென்று அறியவேண்டும். அப்படியில்லாமலிருந்தால் (அது, இது, முதலான வகையில் சொல்லக்கூடியதாயிருந்தால்) ஆத்மா (இந்திரியம் மனஸ் முதலானதுகளால் கிரஹிக்கக்கூடிய) விஷயமாகிவிடும்; தவிரவும் வெளிப் பதார்த்தமாகவும் ஆகிவிடும். (18)

इदमिदमिति प्रतीते वस्तुनि सर्वत्र बाध्यमानेऽपि ।
अनिदमबाध्यं तत्त्वं तस्मादेतस्य न परोक्षत्वम् ॥ १९ ॥

இதமிதமிதி ப்ரதீதே வஸ்துனி ஸர்வத்ர பாத்யமானேZபி |
அநிதமபாத்யம் தத்வம் தஸ்மாதேதஸ்ய ந பரோக்ஷத்வம் ||

**इदमिदमिति**-இது இது என்று, **प्रतीते**-தோன்றுகிற, **सर्वत्र वस्तुनि** - எல்லாப்பொருளும், **बाध्यमानेऽपि**-பாதிக்கப்படுகிற போதிலும், **अनिदं**-'இது' வல்லாத, **तत्वं**-தத்வம், **अबाध्यं**-பாதிக்கப்படாதது. **तस्मात्**-ஆகையால், **एतस्य**-இதற்கு, **न परोक्षत्वं**-பரோக்ஷமாயிருக்கும் தன்மை கிடையாது.

"இது, இது" என்று தோன்றுகிற எல்லா வஸ்துக்களும் பாதிக்கப்பட்டபோதிலும் கூட "இது" வல்லாததான தத்வம் பாதிக்கப்படமாட்டாது. அதனுலேயே இதற்கு வெளிப்பதார்த்தமாயிருக்கும் தன்மை கிடையாது.

नावेद्यमपि परोक्षं भवति ब्रह्म स्वयंप्रकाशत्वात् ।
सत्यं ज्ञानमनन्तं ब्रह्मेत्येतस्य लक्षणं प्रथते ॥ २० ॥

நாவேத்யமபி பரோக்ஷம் பவதி ப்ரஹ்ம
ஸ்வயம்ப்ரகாஶத்வாத் |
ஸத்யம் ஞானமநந்தம் ப்ரஹ்மேத்யேதஸ்ய லக்ஷணம்
ப்ரததே ||

**ब्रह्म**-ப்ரஹ்மமானது, **स्वयंप्रकाशत्वात्**-தானுகவேபிரகாசிக்கிறபடியால், **अवेद्यमपि**-(மற்றொன்றால்) அறியக் கூடாததாக இருந்தபோதிலும், **परोक्षं**-பரோக்ஷமாக, **न भवति**-ஆவதில்லை, **सत्यं**-ஸத்யமாகவும், **ज्ञानं**-ஞான ஸ்வரூபமாகவும், **अनन्तं**-(தேசகாலவஸ்துக்களால்) எல்லையற்றதாகவும் உள்ளது, **ब्रह्म**-ப்ரஹ்மம், **इति**-என்று, **एतस्य**-இதனுடைய, **लक्षणं**-லக்ஷணம், **प्रथते**-பிரஸித்தமாக இருக்கிறது.

பிரஹ்மமானது ஞானத்திற்கு விஷயமில்லாமல் போனாலும் அறியப்படாத வெளிப்பதார்த்தமாகிவிடாது,

ஏனென்றால் அது (கருவிகளின் உதவியை எதிர்பார்க்காமல்) தானாகவே பிரகாசிக்கும் தன்மையுடையது. "பிரஹ்மமானது ஸத்ய வஸ்து, ஞானஸ்வரூபம், எல்லையற்றது" என்று இதன் லக்ஷணம் பிரஸித்தமானது.

[தன்னைக்காட்டிலும் வேறாக உள்ள பொருள்தான் முதலில் பரோக்ஷமாக இருந்து பிறகு அதைக் கருவிகளால் அறிந்துகொண்டதும் அபரோக்ஷமாக ஆகும். பின்னால் இது மறைந்தும் போகும். தானாகவே இருக்கும் ஆத்மா வேறொன்றால் அறியப்படுகிறதில்லை. ஆனாலும் ஆத்மா ஸ்வயம்ப்ரகாசமானதால் எப்பொழுதும் அபரோக்ஷமாகவும் மறைந்துபோகாமலும் இருக்கிறது.] (20)

(அ) ஜீவனும் ஈசுவரனும் உண்மையில் ப்ரஹ்மமே:—

सति कोशशक्त्युपाधौ संभवतस्तस्य जीवतेश्वरते ।
नो चेत् तयोरभावाद्विगतविशेषं विभाति निजरूपम् ॥ २१ ॥

ஸதி கோஶ ஶக்த்யுபாதௌ ஸம்பவதஸ்தஸ்ய
ஜீவதேச்வரதே ।
நோ சேத் தயோரபாவாத் விகதவிஶேஷம் விபாதி நிஜரூபம் ॥

**तस्य**–அந்த ப்ரஹ்மத்திற்கு, **कोशशक्त्युपाधौ सति**-ஐந்து கோசங்கள், மாயாசக்தி என்ற உபாதிகள் இருக்குமேயானால், **जीवतेश्वरते**(முறையே) ஜீவத்தன்மையும், ஈசுவரத் தன்மையும், **संभवतः**–ஏற்படுகின்றன, **नोचेत्** – இல்லாவிட்டால், **तयोः अभावात्**–அந்த ஜீவன், ஈசுவரன் என்ற வேற்றுமைகள் இல்லாததால், **विगतविशेषं**–விசேஷரூபங்கள் அற்றதாக, **निजरूपं**-உண்மையான ஸ்வரூபம், **विभाति** – விளங்குகிறது.

அந்த பிரஹ்மத்திற்கே பஞ்சகோசங்களாகிற உபாதி இருந்தால் ஜீவன் என்கிற தன்மையும், சக்தியென்ற உபாதி இருந்தால் ஈசுவரன் என்கிற தன்மையும் ஏற்படுகின்றன. அப்படியில்லையானால் (அதாவது அந்த இரண்டுவித உபாதி

களும் இல்லையானல்) தனிப்படுத்திக்காட்டும் விசேஷம் போய்விட்டபடியால் ஜீவன், ஈசுவரன் என்ற வேற்றுமை விலகி வாஸ்தவமான சுத்த ஸ்வரூபம் நன்கு விளங்கும்.

[ஒரே சைதன்யம் பஞ்சகோசங்கள் என்னும் உபாதியால் ஜீவனுகவும், மாயாசக்தி உபாதியால் ஈசுவரனுகவும் தோன்றுகிறது. இந்த உபாதிகள் நீங்கிவிட்டால் வேற்றுமையற்றதாக சுத்த ப்ரஹ்மம் நன்கு பிரகாசிக்கும்]

सति सकलदृश्यबाधे न किमप्यस्तीति लोकसिद्धं चेत् ।
यन्न किमपीति सिद्धं ब्रह्म तदेवेति वेदतः सिद्धम् ॥ २२ ॥

ஸதி ஸகலத்ருச்யபாதே ந கிமப்யஸ்தீதி லோகஸித்தம் சேத்।
யந்ந கிமபீதி ஸித்தம் ப்ரஹ்ம ததேவேதி வேதத: ஸித்தம் ॥

**सकलदृश्यबाधे सति**–அறியப்படும் எல்லாப்பொருள்களும் பாதிக்கப்பட்டபொழுது, **किमपि**-ஒன்றும், **नास्ति**–இல்லை, **इति**–என்று **लोकसिद्धं चेत्**–லோகத்தில் பிரஸித்தமாக உள்ளதே என்ருல், **न किमपीति**-ஒன்றுமே இல்லை என்று, **यत् सिद्धं**–எது பிரஸித்தமாக உள்ளதோ, **तदेव**–அதுவே, **ब्रह्म**–ப்ரஹ்மம், **इति**–என்று, **वेदतः**–வேதத்தால், **सिद्धं**–தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

அனுபவிக்கப்படுவதெல்லாம் பாதிக்கப்பட்டபோது "ஒன்றுமேயில்லை" என்று உலகத்தில் பிரஸித்தமானதேயென்ருல் "ஒன்றுமேயில்லை" என்று எது ஏற்படுகிறதோ அதுவே பிரஹ்மம் என்று வேதத்தில் தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது.

[எல்லாப்பொருள்களும் மறைந்துவிட்டால் ஒன்றுமே இல்லையே, ப்ரஹ்மமும் இல்லையே என்ற கேள்விக்கு ஒன்றுமே இல்லை என்று தெரிவதாலேயே அதை விளக்கிக்கொண்டு ப்ரஹ்மம் ப்ரகாசிக்கிறது என்பது பதில்.] (22)

தத், த்வம், பதங்களின் இருவித அர்த்தம் :—

एवंमतिरहितानां तत्त्वमसीत्यादिवाक्यचिन्तनया ।
प्रतिभात्येष परोक्षवदात्मा प्रत्यक्प्रकाशमानोऽपि ॥ २३ ॥

ஏவம் மதி ரஹிதானும் தத்த்வமஸீத்யாதி வாக்ய சிந்தநயா ।
ப்ரதிபாத்யேஷ பரோக்ஷவதாத்மா ப்ரத்யக்
ப்ரகாஶமானோऽபி ॥

एवंमतिरहितानां - இப்பேற்பட்ட (முன் கூறப்பட்ட) ஞானம் இல்லாதவர்களுக்கு, तत्त्वमसीत्यादिवाक्यचिन्तनया - 'தத்த்வமஸி' இது முதலான வாக்யங்களின் பொருளைச் சிந்தனைசெய்வதால் एषः-இந்த, आत्मा-ஆத்மா, प्रत्यक्प्रकाश-मानोऽपि-உள்ளே தானுக பிரகாசித்துக் கொண்டிருந்த போதிலும், परोक्षवत् - பரோக்ஷம்போல், प्रतिभाति - தோன்று கிறது.

இவ்வித ஞானமில்லாதவர்களுக்கு ஆத்மா வாஸ்தவத்தில் உள்ளேயே பிரகாசித்துக்கொண்டிருந்தபோதிலும், தத் த்வம் அஸி ("நீ அது") முதலான வாக்யங்களை மட்டும் சிந்தனை செய்வதன் மூலம் வெளிப் பதார்த்தம்போல் தோன்றும். (23)

तस्मात् पदार्थशोधनपूर्वं वाक्यस्य चिन्तयन्नर्थम् ।
देशिकदयाप्रभावादपरोक्षयति क्षणेन चात्मानम् ॥ २४ ॥

தஸ்மாத் பதார்த்த ஶோதந பூர்வம் வாக்யஸ்ய
சிந்தயந்நர்த்தம் ।
தேஶிக தயா ப்ரபாவாதபரோக்ஷயதி க்ஷணேந சாத்மாநம் ॥

तस्मात्-ஆகையால், पदार्थशोधनपूर्वं- (மஹாவாக்யத்தில் உள்ள) பதங்களின் அர்த்தத்தை முதலில் பரிசோதித்து वाक्यस्य-வாக்யத்தின், अर्थं-பொருளை, चिन्तयन्-சிந்தனம் செய்கிறவன், देशिकदयाप्रभावात्-ஆசார்யருடைய கிருபையின் மஹிமையால், क्षणेन च-ஒரு க்ஷணத்திலேயே, आत्मानं ஆத்மஸ்வருபத்தை, अपरोक्षयति-நேரில் தெரிந்து கொள் கிருன்.

ஆகையினால் வார்த்தைகளுடைய அர்த்தத்தை சோதித்துத் தெரிந்துகொண்ட பின்பு (அவ்வார்த்தைகளின் ஸமுதாயமான) வாக்யத்தின் அர்த்தத்தை அநுஸந்தானம் செய்துகொண்டு குருநாதருடைய கருணையின் பிரபாவத்தினால் ஒரு க்ஷணத்திலேயே ஆத்மாவை ஸாக்ஷாத்கரிப்பான். (24)

(அ) த்வம்பத வாச்யார்த்தம் :—

देहेन्द्रियादिधर्मानात्मन्यारोपयन्नभेदेन ।
कर्तृत्वाद्यभिमानी बोधः स्यात् त्वंपदस्य वाच्योऽर्थः ॥ २५॥

தேஹேந்த்ரியாதி தர்மாநாத்மன்யாரோபயன்னபேதேன ।
கர்த்ருத்வாத்யபிமானீ போத: ஸ்யாத் த்வம்பதஸ்ய
வாச்யோऽர்த்த: ॥

देहेन्द्रियादिधर्मान्-தேஹம், இந்திரியம் முதலானவற்றின் தர்மங்களை, अभेदेन-வேற்றுமையில்லாமல், आत्मनि-தன்னிடம், आरोपयन्-ஆரோபணம் செய்து கொண்டு कर्तृत्वाद्यभिमानी-செய்கிறதன்மை முதலானவைகள் தன்னிடமிருப்பதாக நினைக்கிற, बोधः-சைதன்யம், त्वंपदस्य-(மஹாவாக்யத்திலுள்ள) த்வம்பதத்தின், वाच्यः-வாச்யமான अर्थः स्यात्-பொருளாக ஆகும்.

தேஹம் இந்திரியங்கள் முதலானவைகளின் தர்மங்களை வேற்றுமையில்லாமல் ஆத்மாவில் ஆரோபணம் செய்து, தானே (கர்த்தா, போக்தா, ஞாதா என்ற விதமாய்) செய்கிறவன் முதலானவன் போல் அபிமானித்துக்கொண்டிருக்கும் சைதன்யம் தான் த்வம் "நீ" என்கிற வார்த்தையின் வாச்யமான (ஸாதாரணமாய் சொல்லக்கூடிய) அர்த்தமாகும். (25)

(அ) த்வம்பத லக்ஷ்யார்த்தம் :—

देहस्य चेन्द्रियाणां साक्षी तेभ्यो विलक्षणत्वेन ।
प्रतिभाति योऽवबोधः प्रोक्तोऽसौ त्वंपदस्य लक्ष्योऽर्थः ॥

தேஹஸ்ய சேந்த்ரியாணும் ஸாக்ஷீ தேப்யோ
விலக்ஷணத்வேன ।
ப்ரதிபாதி யோऽவபோத: ப்ரோக்தோऽஸௌ த்வம்பதஸ்ய
லக்ஷ்யோர்த்த: ॥

**देहस्य**–தேஹத்திற்கும், **इन्द्रियाणां च**–இந்திரியங்களுக்கும், **साक्षी**–ஸாக்ஷியாக (நேரில் அறிகிறதாக), **तेभ्यः**-அந்த தேஹம் இந்திரியம் இவைகளைக்காட்டிலும், **विलक्षणत्वेन**-வேருக, **यः अवबोधः**-எந்த சைதன்யம், **प्रतिभाति**-ப்ரகாசிக்கிறதோ, **असौ**–அது, **त्वंपदस्य**-த்வம்பதத்தின், **लक्ष्योऽर्थः**-லக்ஷ்யமான அர்த்தமாக, **प्रोक्तः**-சொல்லப்பட்டிருக்கிறது.

தேஹத்திற்கும் இந்திரியங்களுக்கும் ஸாக்ஷியாக இருந்துகொண்டு அவைகளுக்கு விருத்தமான லக்ஷணத்தோடு பிரகாசிக்கிற எந்த சைதன்யமோ, அது த்வம் " நீ " என்கிற வார்த்தையின் லக்ஷ்யமான (உள்கருத்தான) அர்த்தமாகும். (26)

(அ) தத்பத வாச்யார்த்தம் :—

वेदावसानवाचा संवेद्यं सकलजगदुपादानम् ।
सर्वज्ञताद्युपेतं चैतन्यं तत्पदस्य वाच्योऽर्थः ॥ २७ ॥

வேதாவஸாந வாசா ஸம்வேத்யம் ஸகல ஜகதுபாதானம் ।
ஸர்வஜ்ஞதாத்யுபேதம் சைதன்யம் தத்பதஸ்ய
வாச்யோऽர்த்த: ॥

**वेदावसानवाचा**-வேதாந்த வாக்யத்தால், **संवेद्यं**-நன்கு அறியத்தக்கதாயும், **सकलजगदुपादानं**-எல்லா உலகங்களுக்கும் உபாதானகாரணமாயும், **सर्वज्ञताद्युपेतं**-ஸர்வஜ்ஞத்வம் முதலானவற்றுடன் கூடியதாயும் உள்ள, **चैतन्यं**-சைதன்யம், **तत्पदस्य**-தத்பதத்தின், **वाच्यः**–வாச்யமான **अर्थः**-அர்த்தம்.

வேதாந்தவாக்கியத்திலேயே நன்கு அறியத்தக்கதாய் ஸகல ஜகத்திற்கும் உபாதான காரணமாய் ஸர்வக்ஞத்

தன்மை முதலான தர்மங்களோடு கூடினதுமான சைதன்யம் தத் " அது" என்கிற வார்த்தையின் வாச்யமான அர்த்தம். (27)

(அ) தத்பத லக்ஷ்யார்த்தம் :—

विविधोपाधिविमुक्तं विश्वातीतं विशुद्धमद्वैतम् ।
अक्षरमनुभववेद्यं चैतन्यं तत्पदस्य लक्ष्योऽर्थः ॥ २८ ॥

விவிதோபாதி விமுக்தம் விச்வாதீதம் விசுத்தமத்வைதம்।
அக்ஷரமனுபவவேத்யம் சைதன்யம் தத்பதஸ்ய
லக்ஷ்யோர்த்த: ॥

विविधोपाधिविमुक्तं-பலவித உபாதிகளிலிருந்தும் விடுபட்டதாயும், विश्वातीतं-பிரபஞ்சத்திற்கு அப்பாற்பட்டதாயும், विशुद्धं-பரிசுத்தமாயும், अद्वैतं-இரண்டற்றதாயும், अक्षरं- அழிவற்றதாயும், अनुभववेद्यं-அனுபவத்தால் மட்டும் அறியக்கூடியதாயும் உள்ள, चैतन्यं-சைதன்யம், तत्पदस्य-தத்பதத்தின், लक्ष्योऽर्थः-லக்ஷ்யமான அர்த்தமாகும்.

பலவித உபாதிகளிலிருந்து விடுபட்டதாய் ஜகத்திற்கு மேற்பட்டதாய், அதிசுத்தமாய், இரண்டற்றதாய், நாசமற்றதாய், அனுபவத்தினால் மாத்திரம் அறியக்கூடியதாயுள்ள சைதன்யம் " தத் " அது " என்கிற வார்த்தையின் லக்ஷ்யமான அர்த்தம் (28)

தத்வமஸிவாக்யார்த்தம் :—

सामानाधिकरण्यं तदनु विशेषणविशेष्यता चेति ।
अथ लक्ष्यलक्षकत्वं भवति पदार्थात्मनां च संबन्धः ॥

ஸாமானாதிகரண்யம் ததனு விசேஷண விசேஷ்யதா சேதி।
அத லக்ஷ்ய லக்ஷகத்வம் பவதி பதார்த்தாத்மனாம் ச
ஸம்பந்த: ॥

पदार्थात्मनां-பதங்களின் அர்த்தமான பொருள்களுக்கு, सामानाधिकरण्यं - ஸாமானாதிகரண்யம், तदनु-அதன்பின், विशेषणविशेष्यता च-விசேஷண விசேஷ்யபாவம், अथ-பிறகு,

लक्ष्यलक्षकत्वं-லக்ஷ்ய லக்ஷகத்வம், इति-என்பவைகளில் ஒன்று, संबन्धः-ஸம்பந்தமாக, भवति-ஆகிறது.

பதங்களுக்கு அர்த்தமாக விருக்கும் வஸ்துக்களுக்குள் ஸம்பந்தம் ஸாமாநாதிகரண்யமாகவோ, விசேஷண விசேஷ்ய பாவமாகவோ, லக்ஷ்ய லக்ஷக ஸம்பந்தமாகவோ இருக்கும்.

[உதாஹரணம்:- "ஜானகீ வைதேஹீ", இங்கு ஜானகி என்கிற பதம் யாரைக் குறிக்கிறதோ அவளையே வைதேஹீ என்கிற பதமும் குறிப்பதனால் இரண்டு பதங்களின் அர்த்தமும் ஸமமான ஒரே வியக்தியை அதிகரணமாக ஆசிரயிப்பதினால் இவ்விரு பதங்களுக்கும் ஸாமாநாதிகரண்ய ஸம்பந்தம் எனப்படும். "ஜானகீ ரூபவதீ", இங்கு ரூபவதீ என்கிற பதம் ஜானகியின் ஒரு குணத்தை விசேஷித்து (தனித்து) எடுத்துக் காட்டுவதால், இங்குள்ள இரு பதங்களுக்கும் உள்ள ஸம்பந்தம் விசேஷண விசேஷ்ய பாவம் ஆகும். "ஜானகீ அக்னி:" இங்கே வாஸ்தவத்தில் ஜானகி அக்னியுமில்லை, அக்னி ஜானகியுமல்ல; அப்படியிருந்தும் அக்னி என்ற சப்தத்தினால் குறிக்கப்படுகின்ற அதன் தன்மையான தேஜஸ்ஸை மாத்திரம் கிரஹித்துக்கொண்டு ஜானகி மற்றவர்களால் நெருங்கமுடியாதவள் நெருங்கினால் நாசத்தை அடைவார்கள் என்பதை குறிப்பிடக்கருதி அவளை அக்கினியென்று சொல்வதால் இங்குள்ள ஸம்பந்தம் லக்ஷ்ய லக்ஷக ஸம்பந்தம் என்பார்கள் இவ்வித மூன்றுவகை ஸம்பந்தங்களில் ஸாமாநாதிகரண்யமே இப்பொழுது பிரகிருதத்திற்கு வேண்டியிருப்பதால் அதையே மேல் சுலோகத்தில் விளக்குகிறார்.] (29)

एकत्र वृत्तिरर्थे शब्दानां भिन्नप्रवृत्तिहेतूनाम् ।
सामानाधिकरण्यं भवतीत्येवं वदन्ति लाक्षणिकाः ॥ ३० ॥

ஏகத்ர வ்ருத்திரர்த்தே ஶப்தாநாம் பிந்நப்ரவ்ருத்தி
ஹேதூநாம் ।
ஸாமாநாதிகரண்யம் பவதீத்யேவம் வதந்தி லாக்ஷணிகா: ॥

**भिन्नप्रवृत्तिहेतूनां**-வெவ்வேறுன ப்ரவ்ருத்தி நிமித்தங்களுள்ள, **शब्दानां**-சப்தங்களுக்கு, **एकत्र अर्थे**-ஒரே பொருளில் **वृत्तिः**-இருப்பது, **सामानाधिकरण्यं** – ஸாமாநாதிகரண்யமாக **भवति**–ஆகிறது, **इत्येवं**-என்று இவ்வாறு, **लाक्षणिकाः**–லக்ஷணம் அறிந்தவர்கள், **वदन्ति**–சொல்கிருர்கள்.

சப்தங்கள் ஏற்படுவதற்குள்ள காரணங்கள் வெவ்வேருயிருந்த போதிலும் அவைகள் எல்லாமே ஒரே விஷயத்தை ஆசிரயித்திருக்குமாஞல் ப்போழுது ஸாமாநாதிகரண்யம் ஆகும் என்று அதன் லக்ஷணம் அறிந்தவர்கள் சொல்லுகிருர்கள்.

[ஒரு சப்தம் ஒரு பொருளை உணர்த்துவதற்கு எது காரணமோ அதுவே ப்ரவ்ருத்தி நிமித்தம் எனப்படும். ஒவ்வொரு சொல்லுக்கும் ஒவ்வொன்று ப்ரவ்ருத்தி நிமித்தமாக இருக்கும். ஜனகனின் குமாரி என்பது '**जानकी**' என்ற பதத்திற்கு ப்ரவ்ருத்தி நிமித்தம். விதேஹநாட்டு அரசனின் குமாரி என்பது '**वैदेही**' என்ற பதத்திற்கு ப்ரவ்ருத்தி நிமித்தம். இவ்வாறு இரண்டு பதங்களுக்கும் ப்ரவ்ருத்தி நிமித்தங்கள் வெவ்வேருயிருந்தபோதிலும் '**जानकी वैदेही**' என்று சொல்லும் பொழுது இரு பதங்களும் சேர்ந்து ஒரே ஸீதாவ்யக்தியைக் குறிப்பதால் இங்கு இரு பதங்களின் ஸம்பந்தம் ஸாமாநாதிகரண்யமாகும்.] (30)

**प्रत्यक्त्वपरोक्षत्वे परिपूर्णत्वं च सद्वितीयत्वम्।**
**इतरेतरं विरुद्धं तत इह भवितव्यमेव लक्षणया ॥ ३१ ॥**

ப்ரத்யக்த்வபரோக்ஷத்வே பரிபூர்ணத்வம் ச ஸத்விதீயத்வம்|
இதரேதரம் விருத்தம் தத இஹ பவிதவ்யமேவ லக்ஷணயா ||

**प्रत्यक्त्वपरोक्षत्वे**-உள்ளிருக்கும் தன்மை, வெளியிலிருக்கும் தன்மை இவ்விரண்டும், **परिपूर्णत्वं**-(இரண்டற்று) எங்கும் நிறைந்திருக்கும் தன்மையும், **सद्वितीयत्वं च**-இரண்டாவதோடு கூடியிருக்கும் தன்மையும், **इतरेतरं**-ஒன்றுக்

கொன்று, विरुद्धम्-நேர் எதிரிடையானவை, ततः-ஆகையால், इह-இங்கு, लक्षणया एव-லக்ஷிணையினால்தான், भवितव्यम्-இருக்கத்தக்கது.

பிரகிருதத்தில் (தத் த்வம் அஸி — "நீ அது" என்கிற விடத்தில்) நீஎன்பதிலுள்ள உள்ளிருக்கும் தன்மையும் அது என்பதிலுள்ள வெளியிலிருக்கும் தன்மையும் அப்படியே இரண்டாவதோடிருக்கும் தன்மை நீ என்பதிலும் பரிபூர்ண மாயிருக்கும் தன்மை அது என்பதிலும், இருப்பவைகள் ஒன்றுக்கொன்று முறண்படுகின்றன ஆகையால் இந்த இடத்தில் லக்ஷிணைதான் இருக்கவேண்டும்.

['த்வம்' பதத்திற்கு வாச்யார்த்தமான ஜீவனிடம் ப்ரத்யக்த்வமும் ஸத்விதீயத்வமும் உள்ளன. 'தத்' பதத்திற்கு வாச்யார்த்தமான ஈசுவரனிடம் பரோக்ஷத்வமும் பரிபூர்ணத்வமும் உள்ளன. ஆகவே ஒன்றுக்கொன்று நேர் எதிரிடையான தர்மங்களுடன் கூடியிருப்பதால் तत्त्वमसि வாக்யத்தின் அர்த்தம் பாதிதமாகிறது. ஆகையால் தத்பதத்திற்கும் த்வம்பதத்திற்கும் லக்ஷிணைதான் கூறவேண்டும்.] (31)

मानान्तरोपरोधान्मुख्यार्थस्यापरिग्रहे जाते ।
मुख्याविनाकृतेऽर्थे या वृत्तिः सैव लक्षणा प्रोक्ता ॥ ३२ ॥

மானாந்தரோபரோதான் முக்யார்த்தஸ்யாபரிக்ரஹே ஜாதே।
முக்யாவிநாக்ருதேऽர்த்தே யா வ்ருத்தி: ஸைவ லக்ஷணா
ப்ரோக்தா ॥

मानान्तरोपरोधात्-வேறு ப்ரமாணத்திற்கு விரோதமாயிருப்பதால், मुख्यार्थस्य-முக்யமான வாச்யார்த்தத்தை, अपरिग्रहे जाते-வைத்துக்கொள்ள முடியாத நிலை ஏற்பட்டபொழுது, मुख्याविनाकृते-முக்யார்த்தத்துடன் கூடவே இருக்கும், अर्थे-பொருளில், वृत्तिः-இருப்பது, या-எதுவோ, सैव-அதுவே, लक्षणा-லக்ஷிணையாக, प्रोक्ता-சொல்லப்பட்டுள்ளது.

மற்ெருரு பிரமாணத்திற்கு விரோதமாயிருப்பது காரணம்பற்றி முக்கியமான அர்த்தத்தைக் கைவிடும்படி ஏற்படும்போது, முக்கியமான அர்த்தத்தை விட்டு விலகாமலிருக்கும் ஒரு பதார்த்தத்தை குறிப்பது எதுவோ அதுவே லக்ஷணை என்று சொல்லப்பட்டிருக்கிறது. (32)

निखिलमपि वाच्यमर्थं त्यक्त्वा वृत्तिस्तदन्वितेऽन्यार्थे ।
जहतीति लक्षणा स्याद् गङ्गायां घोषवदिह न ग्राह्या ॥ ३३ ॥

நிகிலமபி வாச்யமர்த்தம் த்யக்த்வா வ்ருத்திஸ் ததன்விதே-
ऽந்யார்த்தே ।
ஜஹதீதி லக்ஷணா ஸ்யாத் கங்காயாம் கோஷவதிஹ ந
க்ராஹ்யா ॥

निखिलमपि वाच्यमर्थं-வாச்யார்த்தம் முழுவதையும், त्यक्त्वा-விட்டு விட்டு, तदन्विते-அந்த வாச்யார்த்தத்துடன் ஸம்பந்தப்பட்ட, अन्यार्थे-வேறு பொருளில், वृत्तिः-இருப்பது गङ्गायां-கங்கையில், घोषवत्-இடைச்சேரி என்பதுபோல், जहतीति-ஜஹதீ என்ற, लक्षणा-லக்ஷணையாக, स्यात्-ஆகும் (இது), इह-இங்கு, न ग्राह्या-ஏற்றுக்கொள்ளத்தக்கதல்ல.

வாச்யமான அர்த்தம் முழுவதையும் விட்டு விட்டு வாச்யார்த்தத்துடன் ஸம்பந்தப்பட்ட வேறு பதார்த்தத்தைக் குறிப்பது "ஜஹதீ லக்ஷணா" (விட்ட லக்ஷணை) யாகும். "கங்கையில் இடைச்சேரி" என்பதுபோல. இது இங்கே பொருந்தாது.

[கங்கை என்கிற சப்தம் முக்கியமாக ஜலப்ரவாஹத்தையே குறிக்கும். அதில் சேரி இருக்கமுடியாது. ஆகையால் "கங்கையில்" என்பதற்கு கங்கைக்கு ஸம்பந்தப்பட்ட "கங்கைக் கரையில்" என்று அர்த்தம் சொல்ல வேண்டியிருக்கிறது. இங்கு வாச்யார்த்தம் முழுவதையும் விட்டு விடுவதால் ஜஹல்லக்ஷணையாகும். 'தத்த்வமஸி' என்ற இடத்தில் வாச்யார்த்தம் முழுவதையும் விடாமல் 'சைதன்யம்' என்ற அம்சத்தை வைத்துக் கொள்வதால் இங்கு ஜஹல்லக்ஷணை பொருந்தாது.] (33)

वाच्यार्थमत्यजन्त्या यस्या वृत्तेः प्रवृत्तिरन्यार्थे ।
इयमजहतीति कथिता शोणो धावतिवदत्र न ग्राह्या ॥ ३४ ॥

வாச்யார்த்தமத்யஜந்த்யா யஸ்யா வ்ருத்தே: ப்ரவ்ருத்தி
ரந்யார்த்தே ।
இயமஜஹதீதி கதிதா ேஶாணோ தாவதிவதத்ர
ந க்ராஹ்யா ॥

वाच्यार्थं-வாச்யமான அர்த்தத்தை, अत्यजन्त्याः-விடாத, यस्याः-எந்த, वृत्तेः-விருத்திக்கு, अन्यार्थे-வேறு அர்த்தத்தில், प्रवृत्तिः-செல்வது ஏற்படுகிறதோ, इयं-இது, शोणो धावतिवत्-சிவப்பு ஓடுகிறதுபோல, अजहतीति-அஜஹல்லக்ஷணே (விடாத லக்ஷணே) என்று, कथिता-சொல்லப்பட்டது. (இதுவும்), अत्र-இங்கு, न ग्राह्या-ஏற்றுக்கொள்ளத்தக்கதல்ல.

வாச்யமான அர்த்தத்தை விடாமலே வேறு பதார்த்தத்தை கிரஹிக்கக் கூடிய விருத்தியை "அஜஹதீ லக்ஷணு" (விடாத லக்ஷணே) என்பார்கள். "சிவப்பு ஓடுகிறது" என்பதுபோல. அதுவும் இங்கே பொருந்தாது.

[வாச்யார்த்தம் முழுவதையும் விட்டு விட்டு வேறு அர்த்தத்தை ஏற்றுக்கொள்வது ஜஹல்லக்ஷணே (விட்ட லக்ஷணே). வாச்யார்த்தத்தை விடாமல் அதனுடன் வேறு அர்த்தமும் கொள்வது அஜஹத் (விடாத) லக்ஷணே. 'शोणो धावति' (சிவப்பு ஓடுகிறது.) இங்கு 'शोणः' என்பது சிவப்பு நிறத்தைக் குறிக்கும். நிறம் மட்டும் தனியாக ஓடக்கூடியதல்ல. ஆகையால் 'शोणः' என்பதற்கு 'சிவப்புக்குதிரை' என்று அர்த்தம் சொல்கிறோம். குதிரை ஓடக்கூடியது. இங்கு வாச்யார்த்தமான சிவப்பு நிறத்தை விடாமல் அத்துடன் குதிரை என்ற அர்த்தத்தையும் சேர்த்துக் கொள்வதால் அஜஹல்லக்ஷணேயாகும். 'तत्वमसि' என்ற இடத்தில் வாச்யார்த்தத்திலேயே ஒரு அம்சத்தை விட்டு விடுவதால் அஜஹல்லக்ஷணேயும் பொருந்தாது.] (34)

जहदजहतीति सा स्याद्या वाच्यार्थैकदेशमपहाय ।
बोधयति चैकदेशं सोऽयं द्विज इतिवदाश्रयेदेनाम् ॥ ३५ ॥

ஜஹதஜஹதீதி ஸா ஸ்யாத் யா வாச்யார்த்தைக
தேசமபஹாய ।
போதயதி சைகதேசம் ஸோऽயம் த்விஜ
இதிவதாச்ரயேதேநாம் ॥

या–எது, वाच्यार्थैकदेशं-வாச்யமான அர்த்தத்தில் ஒரு அம்சத்தை, अपहाय–விட்டுவிட்டு, एकदेशं–மற்றொர் அம்சத்தை, बोधयति–அறிவுறுத்துகிறதோ, सा-அது, सोऽयं द्विज इतिवत्–அந்தபிராஹ்மணரே இவர் என்பது போல, जहद्-जहती-ஜஹதஜஹல்லக்ஷணை (விட்டும் விடாதலக்ஷணை), इति-என்பதாக, स्यात्-ஆகும், एनां-இதை, आश्रयेत्-(தத்த்வமஸி வாக்யத்தில்) கைக்கொள்ளவேண்டும்.

வாச்யமான அர்த்தத்தில் ஒருபாகத்தை விட்டு விட்டு மற்றொரு பாகத்தை மாத்திரம் கிரஹிக்கும் விருத்தி "ஜஹதஜஹதீ லக்ஷணை" (விட்டும் விடாத லக்ஷணை) யாகும். "அந்த பிராஹ்மணரே இவர்" என்பது போல. இதைத்தான் இங்கு ஆச்ரயிக்க வேண்டும். [அவர் என்ற சப்தத்தினால் குறிக்கப்படும் முன்னொரு காலத்தையும் தேசத்தையும், அப்படியே இவர் என்ற சப்தத்தினால் குறிக்கப்படும் இப்போதைய காலத்தையும் தேசத்தையும் விட்டு விட்டு இரண்டு பதங்களுக்கும் பொதுவாயுள்ள வியக்தியை மாத்திரம் இவ்வாக்கியம் கிரஹிக்கிறது] (35)

सोऽयं द्विज इति वाक्यं त्यक्त्वा प्रत्यक्परोक्षदेशाद्यम् ।
द्विजमात्रलक्षकत्वात् कथयत्यैक्यं पदार्थयोरुभयोः ॥ ३६ ॥

ஸோऽயம் த்விஜ இதி வாக்யம் த்யக்த்வா ப்ரத்யக்
பரோக்ஷ தேசாத்யம் ।
த்விஜமாத்ர லக்ஷகத்வாத் கதயத்யைக்யம்
பதார்த்தயோருபயோ: ॥

**सोऽयं द्विज इति वाक्यं**-' அந்த பிராமணரே இவர் ' என்ற வாக்கியம், **प्रत्यक्परोक्षदेशाद्यं**-இப்பொழுது நேரில் தெரிகிற தேசம், காலம் முதலானதுகளையும், இப்பொழுது தெரியாத முன்னால் உள்ள தேசம், காலம் முதலானதுகளை யும், **त्यक्त्वा**-விட்டு விட்டு, **द्विजमात्रलक्षकत्वात्**-பிராஹ்மண வ்யக்தியை மட்டும் குறிப்பதால் **उभयोः पदार्थयोः** - '**सः**' '**अयं**' என்ற இருபதங்களின் அர்த்தங்களுக்கும், **ऐक्यं**-ஒன்றாக இருக்கும் தன்மையை, **कथयति**-சொல்கிறது.

" அந்தபிராஹ்மணரே இவர் " என்கிற வாக்கியம் இப்பொழுது நேரில் தெரிகிற தேசம் முதலானதுகளையும் இப்பொழுது தெரியாமல் அப்பொழுதிருந்த தேசம் முதலானதுகளையும் (ஒன்றுக்கொன்று முரண்படுகிறபடியால்) விட்டு விட்டு (இரண்டிலும் பொதுவான ) பிராஹ்மண சரீரத்தை மாத்திரம் குறித்து அவர் இவர் என்கிற இரண்டு பதங்களின் அர்த்தங்களும் ஒன்றே என்று சொல்கிறது (36)

**तद्वत् तत्त्वमसीति त्यक्त्वा प्रत्यक्परोक्षतादीनि ।**
**चिद्वस्तु लक्षयित्वा बोधयति स्पष्टमसिपदेनैक्यम् ॥ ३७ ॥**

தத்வத் தத்த்வமஸீதி த்யக்த்வா ப்ரத்யக்பரோக்ஷதாதீனி ।
சித்வஸ்து லக்ஷயித்வா போதயதி
ஸ்பஷ்டமஸிபதேனைக்யம் ॥

**तद्वत्** - அதுபோலவே, **तत्त्वमसीति**-' நீ அதுவாக இருக்கிறாய் ' என்ற வாக்யம், **प्रत्यक्परोक्षतादीनि**-ப்ரத்யக்ஷத் தன்மை பரோக்ஷத்தன்மை முதலானவைகளை**त्यक्त्वा**-விட்டு **चिद्वस्तु**-சைதன்யவஸ்துவை, **लक्षयित्वा**-லக்ஷணையால் குறித்து, **असिपदेन**-' அஸி ' என்ற பதத்தால், **ऐक्यं**-ஐக்யத்தை, **स्पष्टं**-நன்கு, **बोधयति**-அறிவிக்கிறது.

அதேமாதிரி " அதுவாகவே நீ இருக்கிறாய்" என்கிற வாக்கியத்தில் (ஒன்றுக்கொன்று முரண்படும்) பிரத்யக்ஷத்தன்மை, பரோக்ஷத்தன்மை, முதலிய அம்சங்களை

விட்டு ( பொதுவாயுள்ள ) சைதன்யமாகிற வஸ்துவை லக்ஷணையினுல் போதித்துவிட்டு அவ்விரண்டு ( அது , நீ ) பதங்களின் லக்ஷ்யார்த்தங்களின் ஐக்யத்தையே " அஸி "( இருக்கிருய் ) என்ற பதம் ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கிறது (37)

इत्थं बोधितमर्थं महता वाक्येन दर्शितैक्येन ।
अहमित्यपरोक्षयतां वेदो वेदयति वीतशोकत्वम् ॥ ३८ ॥

இத்தம் போதிதமர்த்தம் மஹதா வாக்யேந
தர்ஶிதைக்யேன ।
அஹமித்யபரோக்ஷ யதாம் வேதோ வேதயதி
வீதஶோகத்வம் ॥

इत्थं – இவ் விதம், दर्शितैक्येन – ஐக்யத்தைக்காட்டுகிற, महता वाक्येन-மஹாவாக்யத்தினுல், बोधितं- அறிவிக்கப்பட்ட, अर्थं–அர்த்தத்தை, अहमिति–நான் என்று, अपरोक्षयतां–பிரத்யக்ஷமாகத் தெரிந்துகொள்கிறவர்களுக்கு, वीतशोकत्वं- துக்கங்களற்ற நிலையை, वेदः-வேதம், वेदयति- தெரிவிக்கிறது.

இவ்விதமாக மஹாவாக்யம் (ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்குமுள்ள) ஐக்கியத்தை போதிக்கிற அர்த்தத்தை நான்தான் என்று ஸாக்ஷாத்காரம் செய்கிறவர்களுக்கு எவ்வித சோகமும் விலகிவிடும் என்று வேதம் அறிவிக்கிறது (38)

प्रायः प्रवर्तकत्वं विधिवचसां लोकवेदयोर्दृष्टम् ।
सिद्धं बोधयतोऽर्थं कथमिव तद्भवति तत्त्वमस्यादेः ॥ ३९ ॥

ப்ராய: ப்ரவர்த்தகத்வம் விதி வசஸாம் லோக
வேதயோர்த்ருஷ்டம் ।
ஸித்தம் போதயதோऽர்த்தம் கதமிவ தத் பவதி தத்த்வ
மஸ்யாதே: ॥

**लोकवेदयोः**-லோகத்திலும் வேதத்திலும், **प्रायः**-அநேகமாக, **विधिवचसां**-விதிபரமான (ஏவக் கூடிய) வார்த்தைகளுக்குத்தான், **प्रवर्तकत्वं**-ப்ரவர்த்திக்கச்செய்யும் தன்மை, **दृष्टं**-பார்க்கப்பட்டிருக்கிறது. **सिद्धं**-ஸித்தமான, **अर्थं**-விஷயத்தை, **बोधयतः**-போதிக்கிற **तत्त्वमस्यादेः**-தத்த்வமஸி முதலான வாக்யங்களுக்கு, **तत्**-அது, **कथमिव भवति**-எப்படி ஏற்படும்?

உலகத்திலும் வேதத்திலும் அநேகமாய் விதிவாக்யங்களுக்குத்தான் (கட்டளை ரூபமாயிருக்கும் வாக்கியங்களுக்கு) ஏவும் தன்மை உண்டு. அப்படியிருக்க ஏற்கனவே ஸித்தமான விஷயம் இருக்கிறதென்று மாத்திரம் சொல்கிற "தத்த்வம் அஸி" முதலான வாக்யங்களுக்கு ஏவும்தன்மை எப்படி வரும்? (என்று ஆக்ஷேபணை செய்யப்படுகிறது) (39)

विधिरेव न प्रवृत्तिं जनयत्यभिलषितवस्तुबोधोऽपि ।
राजा याति सुतोऽभूदिति बोधेन प्रवर्तते लोकः ॥ ४० ॥

விதிரேவ ந ப்ரவ்ருத்திம் ஜநயத்யபிலஷிதவஸ்து போதோऽபி ।
ராஜா யாதி ஸுதோऽபூதிதி போதேந ப்ரவர்த்ததே லோக: ॥

**विधिरेव**-விதி (ஏவும்படியான சொல்) தான், **प्रवृत्तिं**-ப்ரவ்ருத்தியை **जनयति**-உண்டு பண்ணுகிறது (என்பது) **न**-இல்லை, **अभिलषितवस्तुबोधोऽपि**-விரும்பப்பட்ட பொருளின் அறிவும் (ப்ரவ்ருத்தியை உண்டு பண்ணுகிறது) '**राजा**-அரசன், **याति**-செல்கிறான்' '**सुतः**-பிள்ளை, **अभूत्**-பிறந்தது' **इति**-என்ற, **बोधेन**-அறிவால், **लोकः**-ஜனம், **प्रवर्तते**-ப்ரவர்த்திக்கிறது.

விதிதான் பிரவிருத்தியை உண்டுபண்ணுகிறதென்பது கிடையாது. விரும்பப்பட்ட ஒருவஸ்துவின் ஞானமும் கூட (பிரவிருத்திக்குக் காரணமாகும்) "ராஜா போகிறான்",

"புத்திரன் பிறந்தான்" என்று தெரிந்தவுடனே ஜனங்கள் பிரவிருத்திக்கிருர்கள் அல்லவா!

[ஏவக்கூடிய சொல்தான் ப்ரவ்ருத்தியை உண்டு பண்ணி பலனைக் கொடுக்கும். ஸித்தமான ப்ரஹ்மத்தைக் கூறும் வாக்யம் எப்படி பலனைக்கொடுக்கும் என்று கேள்வி. 'ராஜா போகிருன்' என்கிற வாக்கியம் விதியல்ல; அப்படி யிருந்தும் அதை அறிந்த மனிதர்கள் மரியாதை செய்ய எழுந்திருக்கிருர்கள். 'புத்திரன் பிறந்தான்' என்ற செய்தி யும் விதியாகாது; ஆனாலும் அதைக்கேட்டவுடன் ஸந்தோஷமடைந்து ஸ்நாநாதிகளும் தானங்களும் செய்வ தில்லையா? இதுபோல் ஸித்தமான ப்ரஹ்மத்தைக் கூறும் வாக்யமும் பலனைக் கொடுக்கும்.] (40)

குருகிருபை ஆவச்யகம் :—

ऐक्यपरैः श्रुतिवाक्यैरात्मा शश्वत्प्रकाश्यमानोऽपि ।
देशिकदयाविहीनैरपरोक्षयितुं न शक्यते पुरुषैः ॥ ४१ ॥

ஐக்யபரை: ச்ருதிவாக்யைராத்மா ஶச்வத் ப்ரகாச்ய
மாநோऽபி ।
தேஶிக தயா விஹீனைரபரோக்ஷயிதும் ந ஶக்யதே புருஷை:

ऐक्यपरैः-அபேதத்தில் கருத்துள்ள, श्रुतिवाक्यैः-உபநிஷத் வாக்யங்களால், आत्मा-ஆத்மா, शश्वत्-எப்பொழுதும், प्रकाश्यमानोऽपि-ப்ரகாசிக்கப்படுகிறவனுக இருந்தபோதிலும், देशिकदयाविहीनैः-ஆசார்யருடைய கிருபையைப்பெருத, पुरुषैः-புருஷர்களால், अपरोक्षयितुं-ஸாக்ஷாத்தாகத் தெரிந்து கொள்வதற்கு, न शक्यते-முடியாது.

ஐக்கியத்தையே சொல்லும் வேதவாக்கியங்களினுல் எப்பொழுதும் நன்கு பிரகாசப்படுத்தப்படும் ஆத்மா வானவர் குருநாதரின் தயையில்லாத மனிதர்களால் ஸாக்ஷாத்கரிக்க முடியாது.

[பலதடவைகள் மஹா வாக்யத்தைக் கேட்டு அதன் கருத்தான அபேதத்தைத் தெரிந்துகொண்டபோதிலும் குருகிருபை இல்லாவிட்டால் நானே ப்ரஹ்மம் என்ற ஸாக்ஷாத்காரானுபவம் வராது] (41)

विरहितकाम्यनिषिद्धो विहितानुष्ठाननिर्मलस्वान्तः ।
भजति निजमेव बोधं गुरुणा किमिति त्वया न मन्तव्यम् ॥

விரஹித காம்ய நிஷித்தோ விஹிதாநுஷ்டான நிர்மல
ஸ்வாந்தः ।
பஜதி நிஜமேவ போதம் குருணா கிமிதி த்வயா
ந மந்தவ்யம் ॥

विरहितकाम्यनिषिद्धः-காம்ய கர்மாவையும், நிஷித்த கர்மாவையும் செய்யாமல் விட்டுவிட்டு, विहितानुष्ठाननिर्मलस्वान्तः-சாஸ்திரங்களில் செய்ய வேண்டுமென்று விதிக்கப் பட்ட விஹிதமான கர்மாவை மட்டும் செய்து வருவதால், மனதிலுள்ள தோஷங்கள் எல்லாம் விலகியவனாக, निजमेव बोधं-தனது ஆத்மஞானத்தையே, भजति-அடைந்து விடுகிறான். गुरुणा-குருவினால், किं-என்ன பயன், इति-என்று त्वया-உன்னால், न मन्तव्यम्-எண்ணத்தக்கதல்ல.

புண்ய பாபங்கள்தான் ஞானத்திற்கு பிரதிபந்தகம். (புண்ணியத்திற்குக் காரணமான) காம்ய கர்மாவையும், (பாபத்திற்குக் காரணமான) நிஷித்த கர்மாவையும் செய்யாமலிருந்துகொண்டு (செய்யாததினால் ஏற்படக்கூடிய தோஷம் ஏற்பட இடமன்னியில்) விஹிதமான கர்மாவை மாத்திரம் செய்துகொண்டிருந்தால் மனஸ் நிர்மலமாகி விடுவதால் தானாகவே ஆத்மஞானத்தையடைந்து விடுகிறான்; குருவினால் ஆகவேண்டியது என்ன என்று நீ நினைத்து விடக்கூடாது. (42)

कर्मभिरेव न बोधः प्रभवति गुरुणा विना दयानिधिना ।
आचार्यवान् हि पुरुषो वेदेत्यर्थस्य वेदसिद्धत्वात् ॥ ४३ ॥

கர்மபிரேவ ந போத: ப்ரபவதி குருணு விநா தயாநிதிஞு ।
ஆசார்யவான் ஹி புருஷோ வேதேத்யர்த்தஸ்ய
வேதஸித்தத்வாத் ॥

**आचार्यवान्**-ஆசார்யரோடுகூடிய, **पुरुषः**-புருஷன், **वेद हि**-அறிகிருன் அல்லவா, **इति अर्थस्य**-என்ற விஷயம், **वेदसिद्धत्वात्**-வேதத்தில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறபடியால், **दयानिधिना**-கிருபைக்கு இருப்பிடமான, **गुरुणा विना**-ஆசார்யர் இல்லாமல், **कर्मभिरेव**-கர்மாக்களால் மட்டும், **बोधः**-ஆத்ம ஞானம், **न प्रभवति**-உண்டாகாது.

ஆசார்யனுள்ள புருஷன்தான் (ஆத்மதத்வத்தை) அறிவான் என்ற விஷயம் வேதத்திஞல் தீர்மானம் செய்யப் பட்டிருக்கிறபடியால், தயாநிதியான குரு இல்லாமல் கர்மாக்களிஞலேயே ஞானம் ஏற்படாது. (43)

**வேதப்ராமாண்யம் :—**

वेदोऽनादितया वा यद्वा परमेश्वरप्रणीततया ।
भवति परमं प्रमाणं बाधो नास्ति स्वतश्च परतो वा ॥ ४४ ॥

வேதோऽநாதிதயா வா யத்வா பரமேச்வர ப்ரணீததயா ।
பவதி பரமம் ப்ரமாணம் பாதோ நாஸ்தி ஸ்வதச்ச
பரதோ வா ।

**वेदः**-வேதம், **अनादितया वा**- உத்பத்தியில்லாததஞலோ **यद्वा**-அல்லது, **परमेश्वरप्रणीततया**-ஈசுவரஞல் உண்டுபண்ணப் பட்டிருப்பதஞலோ, **परमं**-உயர்ந்த, **प्रमाणं**-ப்ரமாணமாக, **भवति**-ஆகிறது (இதற்கு) **स्वतश्च**-தன்ஞலோ, **परतो वा**-பிறவற்ருலோ, **बाधः**-பாதம், **नास्ति**-இல்லை.

வேதம் அநாதியாய் இருப்பதஞலென்று வைத்துக் கொண்டாலோ, அல்லது பரமேசுவரஞல் இயற்றப் பட்டதஞலென்று வைத்துக்கொண்டாலோ, (இரு விதத் திலும்) அதுவே உத்தமமான பிரமாணமாகும். தவிரவும்

அதிலிருந்தேபோ, வேறென்றிலோ, அதற்கு எவ்வித பாதமும் (அதைப் பொய்யென்று காட்டுதல்) கிடையாது.

[வேதம் ஒருவராலும் இயற்றப்பட்டதல்ல அது அநாதி, எல்லாக்காலங்களிலும் உள்ளது இந்த ஸித்தாந்தத்தில் வேதம் அபௌருஷேயமாக இருப்பதனாலேயே சிறந்த பிரமாணம். வேதம் ஈசுவரனால் ஸிருஷ்டிக்கப்பட்டது என்ற ஸித்தாந்தத்திலும் ஸர்வஜ்ஞராயும், நிர்தோஷராயும் உள்ள ஈசுவரனால் செய்யப்பட்டதாலேயே வேதம் சிறந்த ப்ரமாணமாகும். இரண்டு விதங்களிலும் வேதத்தில் தோஷமொன்றும் இல்லாததால் அதில் கூறப்பட்டதற்கு மறுப்பே கிடையாது]

नापेक्षते यदन्यद्यदपेक्षन्तेऽखिलानि मानानि ।
वाक्यं तन्निगमानां मानं ब्रह्माद्यतीन्द्रियावगतौ ॥ ४५ ॥

நாபேக்ஷதே யதந்யத் யதபேக்ஷந்தே ऽகிலானி மாநாநி |
வாக்யம் தந்நிகமாநாம் மாநம்
ப்ரஹ்மாத்யதீந்த்ரியாவகதௌ ॥

यत्-எது, अन्यत्-வேறு பிரமாணத்தை, न अपेक्षते-எதிர்பார்க்கிறதில்லையோ, यत्-எதை, अखिलानि मानानि-எல்லா பிரமாணங்களும், अपेक्षन्ते-எதிர்பார்த்திருக்கின்றனவோ, तत्-அந்த, निगमानां-வேதங்களுடைய, वाक्यं-வாக்யமானது, ब्रह्माद्यतीन्द्रियावगतौ-ப்ரஹ்மம் முதலான இந்திரியங்களுக்கு எட்டாத வஸ்துக்களை அறிவதில், मानं-பிரமாணமாகிறது.

எது வேறு பிரமாணத்தை அபேக்ஷிக்கவில்லையோ, எதையே மற்ற எல்லா பிரமாணங்களும் அபேக்ஷிக்கின்றனவோ, அப்பேர்ப்பட்ட வேதவாக்கியங்களே இந்திரியங்களுக்கு எட்டாத பிரஹ்மம் முதலான விஷயங்களை அறிவதற்கு பிரமாணமாகும். (45)

मानं प्रबोधयन्तं बोधं मानेन ये बुभुत्सन्ते ।
एधोभिरेव दहनं दग्धुं वाञ्छन्ति ते महात्मानः ॥ ४६ ॥

மாநம் ப்ரபோதயந்தம் போதம் மாநேந யே புபுத்ஸந்தே ।
ஏதோபிரேவ தஹநம் தக்தும் வாஞ்ச்சந்தி தே மஹாத்மாந:॥

**मानं**-பிரமாணத்தை, **प्रबोधयन्तं**-அறியும்படிச் செய்கிற, **बोधं**-ஆத்மாவை, **ये**-எவர்கள், **मानेन**-பிரமாணத்தால், **बुभुत्सन्ते**-அறியவிரும்புகிறார்களோ, **ते**-அந்த, **महात्मानः**-பெரியோர்கள், **एधोभिरेव**-விறகுகளினாலேயே, **दहनं**-அக்னியை, **दग्धुं**-எரிப்பதற்கு, **वाञ्छन्ति**-விரும்புகிறார்கள்.

பிரமாணங்களையெல்லாம் தெரிவித்துக் கொடுக்கிற ஞானஸ்வரூபனான ஆத்மாவை அந்தப் பிரமாணங்கள் மூலமாய் அறிந்துகொள்ளவேண்டுமென்று யார் நினைக்கிறார்களோ, அப்பெரியார்கள் (கட்டைகளை எரிக்கும்) அக்னியை கட்டைகளைக்கொண்டு எரித்துவிட நினைப்பவர்களே யாவார்கள்

[நெருப்புக்கட்டையை எரித்துச் சாம்பலாக்கி விடும் கட்டையைக்கொண்டு நெருப்பை எரிக்க முயற்சிப்பவன் முட்டாளாகத்தான் இருக்கவேண்டும். இதுபோலவே ஆத்மாதான் பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களை பிரகாசப்படுத்துகிறது. இந்த பிரமாணங்கள் எப்படி ஆத்மாவை பிரகாசப்படுத்தமுடியும்?] (46)

वेदोऽनादिरमुष्य व्यञ्जक ईशः स्वयंप्रकाशात्मा ।
तदभिव्यक्तिमुदीक्ष्य प्रोक्तोऽसौ सूरिभिः प्रणीत इति ॥

வேதோऽநாதிரமுஷ்ய வ்யஞ்ஜக ஈஶ: ஸ்வயம்
ப்ரகாஶாத்மா ।
ததபிவ்யக்திமுதீக்ஷ்ய ப்ரோக்தோऽஸௌ ஸூரிபி:
ப்ரணீத இதி ॥

**वेदः**-வேதமானது, **अनादिः**-ஆதியில்லாதது, **स्वयंप्रकाशात्मा**-தானாகவே பிரகாசிக்கிற ஸ்வரூபமுள்ள, **ईशः**-ஈசுவரன், **अमुष्य व्यञ्जकः**-இந்த வேதத்தை வெளிப்படுத்தியவர். **तदभिव्यक्तिमुदीक्ष्य**-அந்த ஈசுவரனால் வெளிப்பட்டு

வருவதை, उदीक्ष्य-பார்த்து, सूरिभिः-வித்வான்களால், असौ-அந்த வேதம், प्रणीत इति-செய்யப்பட்டதென்று, प्रोक्तः-சொல்லப்பட்டது.

வேதம் ஆதியற்றது. ஸ்வயம்பிரகாச ஸ்வரூபரான ஈசுவரன் அதை வெளிப்படுத்தினவர் (உண்டுபண்ணினவர் அல்ல). அப்படி வெளி வந்ததைப்பார்த்து அது செய்யப் பட்டது என்று ரிஷிகளால் சொல்லப்படுகிறது.

[ராமாயணம், பாரதம் போல் வேதம் ஈசுவரனால், முன்பு இல்லாமல் புதிதாக இயற்றப்பட்டதல்ல. ஆதலால் வேதம் அநாதி (உத்பத்தி இல்லாதது). முன் கல்பத்தில் இருந்து பிரளய காலத்தில் மறைந்திருந்த வேதத்தை ஸிருஷ்டி காலத்தில் ஈசுவரன் வெளியிடுகிறார். இதைக் கண்டுதான் ஈசுவரன் வேதத்தைச் செய்ததாகச் சொல் கிறார்கள். ஈசுவரன் புதிதாகச் செய்யாததால் வேதம் அபௌருஷேயம். ஈசுவரன் வெளிப்படுத்துவதால் வேதம் ஈசுவரப்ரணீதம். ஆதலால் ஒன்றுக்கொன்று விரோதம் இல்லை.] (47)

रूपाणामवलोके चक्षुरिवान्यन्न कारणं दृष्टम् ।
तद्वददृष्टावगतौ वेदवदन्यो न वेदको हेतुः ॥ ४८ ॥

ரூபாணாமவலோகே சக்ஷுரிவாந்யத் ந காரணம் த்ருஷ்டம் ।
தத்வதத்ருஷ்டாவகதௌ வேதவதந்யோ ந வேதகோ
ஹேதுः ॥

रूपाणां-ரூபங்களை, अवलोके-பார்ப்பதில், चक्षुरिव-கண் போல், अन्यत्-வேறு, कारणं-காரணம், न दृष्टम्-பார்க்கப் பட்டதில்லை, तद्वत्-அதுபோலவே, अदृष्टावगतौ-இந்திரியங் களுக்குப் புலப்படாத விஷயங்களை அறிந்துகொள்வதில் वेदवत्-வேதம்போல், अन्यः-வேறு, वेदकः-அறிவிக்கிற, हेतुः-காரணம், न-கிடையாது.

ரூபங்களைப் பார்க்கிற விஷயத்தில் கண்ணைப்போல் வேறு எவ்வித காரணமும் கண்டதில்லை. அப்படியே (இந்திரியாதிகளுக்கு விஷயமாகாத) அதிருஷ்டத்தை அறிவதற்கு வேதத்தைத்தவிர தெரியப்படுத்தக்கூடிய காரணம் கிடையாது. (48)

निगमेषु निश्चितार्थं तन्त्रे कश्चिद्यदि प्रकाशयति ।
तदिदमनुवादमात्रं प्रामाण्यं तस्य सिध्यति न किंचित् ॥

நிகமேஷு நிச்சிதார்த்தம் தந்த்ரே கச்சித் யதி ப்ரகாசயதி ।
ததிதமநுவாதமாத்ரம் ப்ராமாண்யம் தஸ்ய ஸித்யதி ந
கிஞ்சித் ॥

**निगमेषु**–வேதங்களில், **निश्चितार्थं**-தீர்மானிக்கப்பட்டிருக்கிற விஷயத்தை, **तन्त्रे**–சாஸ்திரத்தில், **कश्चित्**–ஒருவர், **यदि प्रकाशयति**–வெளிப்படுத்துவாரேயானல், **तदिदं**–அந்த இது, **अनुवादमात्रं**-அனுவாதம்தான். **तस्य**-அதற்கு, **किंचित् प्रामाण्यं**-ஒருவிதமான ப்ராமாண்யமும், **न सिध्यति**–ஸித்திக்காது.

வேதத்தில் நிச்சயிக்கப்பட்ட ஒரு விஷயத்தைத் தந்திரத்தில் இருப்பதாக யாரேனும் காட்டினால், அந்தத் தந்திரத்திலுள்ளது வெறும் அனுவாதமே (திருப்பிச் சொன்னதே) ஆகும். அதற்குத் தனித்துப் பிராமாண்யம் கொஞ்சமேனும் ஸித்திக்காது.

[அத்ருஷ்டத்தைப்பற்றி வேதத்தில் சொல்லியிருக்கும் அதே விஷயம் சாஸ்திரத்திலும் காணப்படுமேயானால் அந்த விஷயத்தில் வேதம்தான் பிரமாணம். வேதத்தில் சொல்லியிருப்பதைப்பார்த்து அதையே சாஸ்திரம் திருப்பிச் சொல்கிறது ] (49)

அத்வைதமே வேதப்ரதிபாத்யம் :—

अंशद्वयवति निगमे साधयति द्वैतमेव कोऽप्यंशः ।
अद्वैतमेव वस्तु प्रतिपादयति प्रसिद्धमपरोंऽशः ॥ ५० ॥

அம்ஶத்வயவதி நிகமே ஸாதயதி த்வைதமேவ
கோऽப்யம்ஶ: ।
அத்வைதமேவ வஸ்து ப்ரதிபாதயதி ப்ரஸித்தமபரோம்ஶ: ॥

**अंशद्वयवति**-(கர்மகாண்டம், ஞானகாண்டமென்ற) இரு பாகங்களுடன்கூடிய, **निगमे**-வேதத்தில், **कोऽप्यंशः**-ஒரு பாகம் (கர்மகாண்டம்) **द्वैतमेव**-த்வைதத்தையே, **साधयति**-ஸாதிக்கிறது. **अपरः अंशः**-மற்றொரு பாகம் (ஞானகாண்டம்) **प्रसिद्धं**-பிரஸித்தமான, **अद्वैतमेव वस्तु**-அத்வைதமான ப்ரஹ்ம வஸ்துவையே, **प्रतिपादयति**-கருத்துடன் சொல்கிறது.

வேதத்தில் இரண்டு பாகங்களிருப்பதில் ஒருபாகம் (அதாவது கர்ம காண்டம்) வேற்றுமையையே ஸ்திரப் படுத்துகிறது. மற்றொரு அம்சம் (அதாவது ஞான காண்டம்) பிரஸித்தமான வேற்றுமையற்ற வஸ்துவையே (பிரஹ்மத்தையே) பிரதிபாதிக்கிறது. (50)

**अद्वैतमेव सत्यं तस्मिन् द्वैतं न सत्यमध्यस्तम् ।**
**रजतमिव शुक्तिकायां मृगतृष्णायामिवोदकस्फुरणम् ॥ ५१ ॥**

அத்வைதமேவ ஸத்யம் தஸ்மின் த்வைதம் ந
ஸத்யமத்யஸ்தம் ।
ரஜதமிவ ஶுக்திகாயாம் ம்ருகத்ருஷ்ணுயா
மிவோதகஸ்புரணம் ॥

**अद्वैतमेव**-வேற்றுமையற்ற ப்ரஹ்மம்தான், **सत्यम्**-உண்மையானது, **शुक्तिकायां**-கிளிஞ்சலில், **रजतमिव**-வெள்ளி போலவும், **मृगतृष्णायां**-கானலில், **उदकस्फुरणमिव**-நீர் தோன்றுவதுபோலவும், **तस्मिन्**-அந்த ப்ரஹ்மத்தில், **अध्यस्तं**-ஆரோபிக்கப்பட்ட, **द्वैतं**-த்வைதம், **न सत्यं**-வாஸ்தவமல்ல.

(வேற்றுமையற்ற) அத்வைதம்தான் ஸத்யம். கிளிஞ்சலில் வெள்ளி போலவும், கானலில் ஜலம் போலவும்,

ஸத்யமான அத்வைதத்தில் கல்பிதமே (வேற்றுமை) த்வைதம். ஆகையால் அது ஸத்யமில்லை. (51)

आरोपितं यदि स्याद्द्वैतं वस्त्ववस्तुनि द्वैते ।
तदयुक्तमेव यस्मात् सत्येऽध्यासो भवत्यसत्यानाम् ॥ ५२ ॥

ஆரோபிதம் யதி ஸ்யாதத்வைதம் வஸ்த்வவஸ்துனி
த்வைதே ।
ததயுக்தமேவ யஸ்மாத் ஸத்யேZத்யாஸோ
பவத்யஸத்யானும் ॥

वस्तु अद्वैतं–உண்மையான அத்வைதம், अवस्तुनि द्वैते–பொய்யான த்வைதத்தில், यदि आरोपितं स्यात्–ஆரோபிக்கப் பட்டிருக்கட்டுமே யென்ருல், तत्–அது, अयुक्तम्–யுக்திக்குப் பொருத்தமில்லாதது, यस्मात्–ஏனெனில், असत्यानामेव–பொய்யான பொருள்களுக்குத்தான். सत्ये–உண்மைப் பொருளில், अध्यासो भवति–ஆரோபம் ஏற்படுகிறது.

அவஸ்துவான த்வைதத்தில் தான் அத்வைதம் கல்பிதமாயிருக்கட்டுமேயென்ருல் அது யுக்திக்கு ஒவ்வாது. ஏனென்ருல் ஸத்ய பதார்த்தத்தில் தான் அஸத்ய பதார்த்தங்களுக்குக் கல்பனை ஏற்படும். [அஸத்ய பதார்த்தம் அஸத்யமேயானதிஞல் அதன்பேரில் இன்னெரு பதார்த்தம், அதிலும் ஸத்யமான பதார்த்தம், கல்பிக்க முடியும் என்பது யுக்திக்கு விரோதம்] (52)

यद्यारोपणमुभयोस्तद्व्यतिरिक्तस्य कस्यचिदभावात् ।
आरोपणं न शून्ये तस्माद्द्वैतसत्यता ग्राह्या ॥ ५३ ॥

யத்யாரோபணமுபயோஸ் தத்வ்யதிரிக்தஸ்ய
கஸ்யசிதபாவாத் ।
ஆரோபணம் ந ஶூன்யே தஸ்மாதத்வைதஸத்யதா
க்ராஹ்யா ॥

**उभयोः**-(த்வைதம், அத்வைதம்) இரண்டு பதார்த்தங்களுக்கும், **आरोपणं यदि**-அத்யாஸம் இருக்கட்டுமே என்றால், **तद्व्यतिरिक्तस्य**-அவ்விரண்டு பொருள்களைக் காட்டிலும் வேறு, **कस्यचिदभावात्**-ஒரு பொருளும் இல்லாததனாலும், **शून्ये**-சூன்யத்தில், **आरोपणं न**-ஆரோபம் ஏற்பட முடியாததனாலும் (அதுவும் சரியல்ல,) **तस्मात्**-ஆகையால், **अद्वैतसत्यता**-அத்வைதம் உண்மை என்பதுதான், **ग्राह्या**-ஒப்புக்கொள்ளத் தக்கது.

த்வைதம், அத்வைதம் இரண்டுமே கல்பிதமாயிருக்கட்டுமே யென்றால், இவ்விரண்டைத்தவிர வேறு எதுவும் இல்லாததினாலும் வெறும் சூன்யத்தில் கல்பிப்பது ஸாத்தியமில்லாததினாலும் (அவ்விதம் சொல்ல முடியாது). ஆகையால் அத்வைதம் தான் ஸத்யம் என்று ஒப்புக்கொள்ள வேண்டும்.

[கிளிஞ்சல் இருந்தால்தான் அதைப் பார்த்து வெள்ளி என ப்ரமம் கொள்கிறான். கயிறு இருந்தால்தான் அதைப் பாம்பாகக் காண்கிறான். ஒன்றுமில்லாத இடத்தில் வெள்ளி என்றோ, பாம்பு என்றோ ப்ராந்தி ஏற்படுவதில்லை. அதிஷ்டானமான ஒரு பொருளில்தான் மற்றொரு பொருளுக்கு ப்ரமம் ஏற்படுகிறது. கயிறும் கிளிஞ்சலும் அதிஷ்டானம். பாம்பும் வெள்ளியும் ஆரோபிதம். த்வைதம் அத்வைதம் இவ்விரண்டைத் தவிர வேறு பொருள் இல்லை. வேறு அதிஷ்டானமில்லாததால் இரண்டும் ஆரோபிதம் என்று கூறமுடியாது. அத்வைதம் ஆரோபிதமில்லை என்பது முன்னால் கூறப்பட்டிருக்கிறது. ஆதலால் உண்மையான அத்வைதம் அதிஷ்டானம். அதில் த்வைதம் ஆரோபிதம் என்பதுதான் ஸித்தாந்தம்] (53)

प्रत्यक्षाद्यनवगतं श्रुत्या प्रतिपादनीयमद्वैतम् ।
द्वैतं न प्रतिपाद्यं तस्य स्वत एव लोकसिद्धत्वात् ॥ ५४ ॥

ப்ரத்யக்ஷாத்யநவகதம் ச்ருத்யா ப்ரதிபாதநீயமத்வைதம் ।
த்வைதம் ந ப்ரதிபாத்யம் தஸ்ய ஸ்வத ஏவ
லோகஸித்தத்வாத் ॥

**प्रत्यक्षाद्यनवगतं**-பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களால் அறியப்படாத, **अद्वैतं**-அத்வைதம், **श्रुत्या**-வேதத்தால், **प्रतिपादनीयं**-கருத்துடன் விளக்கத்தக்கது. **द्वैतं**-த்வைதம், **न प्रतिपाद्यम्**-கருத்துடன் சொல்லத்தக்கதல்ல, **तस्य स्वत एव लोकसिद्धत्वात्**-அது தானுகவே உலகில் பிரஸித்தமாயிருப்பதால்.

பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்சளால் அறியப்படாததையே வேதம் எடுத்துச் சொல்கிறபடியால் அத்வைதம் தான் அதன் தாத்பர்யம். த்வைதத்தைப்பற்றி வேதம் எடுத்துச்சொல்ல அவசியமேயில்லே; அது தாஞகவே உலகத்தில் பிரஸித்தமாயிருப்பதால்.

[வேதத்தில் த்வைதம், அத்வைதம் இரண்டும் கூறப்பட்டுள்ளது. ஆனாலும் வேறு ஒரு பிரமாணத்தாலும் அறிந்துகொள்ளமுடியாத அத்வைதத்தில்தான் வேதத்திற்குத் தாத்பர்யம். த்வைதத்தை யாவரும் மற்ற ப்ரமாணங்களால் தானுகவே தெரிந்துகொள்கிறபடியால் அதில் வேதத்திற்குத் தாத்பர்யமில்லே] (54)

अद्वैतं सुखरूपं दुःसहदुःखं सदा भवेद्द्वैतम् ।
यत्र प्रयोजनं स्यात् प्रतिपादयति श्रुतिस्तदेवासौ ॥ ५५ ॥

அத்வைதம் ஸுகரூபம் துஸ்ஸஹதுக்கம் ஸதா பவேத்
த்வைதம் ।
யத்ர ப்ரயோஜனம் ஸ்யாத் ப்ரதிபாதயதி
ச்ருதிஸ்ததேவாஸௌ ॥

**अद्वैतं**-அத்வைதம், **सुखरूपं**-ஆனந்தஸ்வரூபம், **द्वैतं**-த்வைதம், **सदा**-எப்பொழுதும், **दुःसहदुःखं**-பொறுக்கமுடியாத துக்கமாக, **भवेत्**-இருக்கும், **यत्र**-எதில், **प्रयोजनं स्यात्**-பலன் இருக்குமோ, **तदेव**-அதைத்தான், **असौ श्रुतिः**-அந்த வேதம், **प्रतिपादयति**-கருத்துடன் கூறுகிறது.

அத்வைதமென்பது ஸுகஸ்வரூபம். எப்பொழுதும் தாங்கமுடியாத துக்க ஸ்வரூபம் த்வைதம். எதை எடுத்துச் சொன்னால் பிரயோஜனமுண்டோ அதைத்தான் வேதம் எடுத்துச்சொல்லும்.

[உலகில் யாவரும் விரும்புவது ஆனந்தம். வெறுப்பது துக்கம். ஹிதத்தை உபதேசிக்கும் வேதம் யாவரும் விரும்பும் ஸுகத்தைத்தான் கருத்துடன் கூறுமே தவிர வெறுக்கும் துக்கத்தை கருத்துடன் கூறுமா? ஆகையால் ஆனந்தரூபமான அத்வைதத்தில்தான் வேதத்திற்குத் தாத்பர்யம். துக்க ரூபமான த்வைதத்தில் தாத்பர்ய மில்லை.] (55)

ஜீவத்தன்மை ஸ்வாபாவிகமல்ல :—

निगमगिरा प्रतिपाद्यं वस्तु यदानन्दरूपमद्वैतम् ।
स्वाभाविकं स्वरूपं जीवत्वं तस्य केचन ब्रुवते ॥ ५६ ॥

நிகமகிரா ப்ரதிபாத்யம் வஸ்து யதாநந்தரூபமத்வைதம் ।
ஸ்வாபாவிகம் ஸ்வரூபம் ஜீவத்வம் தஸ்ய கேசந ப்ருவதே ॥

यत्-எந்த, आनन्दरूपं-ஸுகருபமான, अद्वैतं वस्तु-அத்வைத வஸ்து, निगमगिरा-வேதவாக்யத்தால், प्रतिपाद्यं-கருத்துடன் கூறப்படுகிறதோ, तस्य-அதற்கு, जीवत्वं-ஜீவத் தன்மையை, स्वाभाविकं-இயற்கையாகவே உள்ள, स्वरूपं-அதன் ஸ்வரூபமாக, केचन-சிலர், ब्रुवते-சொல்கிறார்கள்.

ஆனந்தரூபமாய் அத்வைதமாயுள்ள வஸ்து என்று எது வேத வாக்யங்களால் பிரதிபாதிக்கப்படுகிறதோ அதற்கு ஜீவத்தன்மை ஸ்வபாவ ஸித்தமான ஸ்வரூபம் என்கிறார்கள் சிலர். (56)

स्वाभाविकं यदि स्याज्जीवत्वं तस्य विशदविज्ञप्तेः ।
सकृदपि न तद्विनाशं गच्छेदुष्णप्रकाशवद्वह्नेः ॥ ५७ ॥

ஸ்வாபாவிகம் யதி ஸ்யாத் ஜீவத்வம் தஸ்ய
விஶதவிஜ்ஞப்தே: |
ஸக்ருதபி ந தத் விநாஶம் கச்சேதுஷ்ணப்ரகாஶவத்
வஹ்னே: ||

विशदविज्ञप्तेः - பரிசுத்த ஞானஸ்வரூபனுன, तस्य-அந்த அத்வைத ப்ரஹ்மத்திற்கு, जीवत्वं-ஜீவத்தன்மையானது, यदि स्वाभाविकं स्यात्-இயற்கையாகவே கூடவே இருக்குமானல், वह्नेः-நெருப்புக்கு, उष्णप्रकाशवत्-வெப்பமும் வெளிச்சமும்போல் तत्-அது, सकृदपि-ஒரு தடவையாவது, विनाशं-அழிவை, न गच्छेत्-அடையாது.

சுத்த ஞானஸ்வரூபனுன அவனுக்கு ஜீவனுயிருக்கும் தன்மை ஸ்வபாவஸித்தமாயிருக்குமேயானல், (அக்னிக்கு ஸ்வபாவஸித்தமான) உஷ்ணமும் பிரகாசமும் எப்படி அக்னியை விட்டு ஒருக்காலும் விலகாதவையோ அப்படியே ஒருக்காலும் ஜீவனுயிருக்கும் தன்மைக்கு நாசம் ஏற்படாது.

[அக்னியின் ஸ்வருபத்திலேயே சேர்ந்தது வெப்பமும், வெளிச்சமும். அது ஒருக்காலும் அக்னியை விட்டுப் பிரிந்து செல்வதில்லை. வெப்பமில்லாமலோ, வெளிச்சமில்லாமலோ அக்னியை யாரும் கண்டதில்லை இதுபோல் ஜீவத்தன்மை ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமானல் எப்பொழுதும் கூடவே இருக்கும். ஒருக்காலும் ஜீவத்தன்மை விலகாது. ஸுக துக்கானுபவம் எப்பொழுதுமிருக்கும்.] (57)

यद्वदयो रसविद्धं काञ्चनतां याति तद्वदेवासौ ।
जीवः साधनशक्त्या परतां यातीति केचिदिच्छन्ति ॥ ५८ ॥

யத்வதயோ ரஸவித்தம் காஞ்சநதாம் யாதி
தத்வதேவாஸௌ |
ஜீவ: ஸாதநஶக்த்யா பரதாம் யாதீதி கேசிதிச்சந்தி ||

यद्वत्-எப்படி, अयः-இரும்பு, रसविद्धं-திராவகத்துடன் சேர்ந்து, काञ्चनतां-தங்கத்தன்மையை, याति-அடைகிறதோ,

**तद्वदेव**-அதுபோலவே, **असौ जीवः**-அந்த ஜீவன், **साधनशक्त्या**-ஸாதனங்களின் சக்தியால், **परतां**-பரவஸ்துவின் தன்மையை **याति**-அடைகிறான், **इति**-என்று, **केचित्**-சிலர், **इच्छन्ति**-எண்ணுகிறார்கள்.

எப்படி இரும்பானது திராவகத்தின் சேர்க்கையால் தங்கமாக ஆகிவிடுகிறதோ அப்படி இந்த ஜீவனும் ஸாதனங்களின் சக்தியினால் பரவஸ்துவாக (பிரஹ்மமாக) ஆகிவிடுகிறது என்று சிலர் எண்ணுகிறார்கள். (58)

**तदिदं भवति न युक्तं गतवति तस्मिंश्चिरेण रसवीर्ये ।**
**प्रतिपद्यते प्रणाशं हैमो वर्णोऽप्ययःसमारूढः ॥ ५९ ॥**

*ததிதம் பவதி ந யுக்தம் கதவதி தஸ்மிம்ச்சிரேண*
*ரஸவீர்யே ।*
*ப்ரதிபத்யதே ப்ரணாசம் ஹைமோ*
*வர்ணோऽப்யய:ஸமாரூட: ॥*

**तदिदं**-அந்த இதுவும், **न युक्तं भवति**-யுக்தமாக இல்லை. (ஏனெனில்), **तस्मिन्**-அந்த இரும்பில், **चिरेण**-வெகுகாலம் சென்ற பிறகு, **रसवीर्ये**-திராவகத்தின் வீர்யமானது, **गतवति**-போனபிறகு, **अयस्समारूढः**-இரும்பில் ஏறியுள்ள, **हैमो वर्णोऽपि**- தங்க நிறமும், **प्रणाशं प्रतिपद्यते**-அழிந்து போகிறது.

இவ்விதம் எண்ணுவது யுக்தமில்லை. ஏனென்றால் நாள்பட்டு அந்த திராவகத்தின் வீர்யம் போனவுடன் இரும்பின்மேல் ஏறியிருந்த தங்க வர்ணமும் கூட நாசத்தை அடைந்துவிடும். (59)

**जीवत्वमपि तथेदं बहुविधसुखदुःखलक्षणोपेतम् ।**
**गतमिव साधनशक्त्या प्रतिभात्येव प्रयाति न विनाशम् ॥**

ஜீவத்வமபி ததேதம் பஹுவித ஸுகதுக்க
லக்ஷணோபேதம் |
கதமிவ ஸாதனசக்த்யா ப்ரதிபாத்யேவ ப்ரயாதி ந
விநாசம் ||

**तथा**-அவ்வாறு, **बहुविधसुखदुःखलक्षणोपेतं**-பலவித ஸுக துக்க லக்ஷணங்களுடன்கூடிய, **इदं जीवत्वमपि**-இந்த ஜீவத் தன்மையும், **साधनशक्त्या**-ஸாதனங்களின் ஸாமர்த்யத்தினுல், **गतमिव प्रतिभाति**-விலகினதுபோல் தோன்றும், **विनाशं न प्रयात्येव**-நாசத்தை அடையவே செய்யாது.

அதேமாதிரி, பலவித ஸுகதுக்க லக்ஷணங்களோடு கூடிய ஜீவத்தன்மையும் ஸாதனங்களின் சக்தியினுல் போய்விட்டமாதிரி தோன்றுமே தவிர நாசத்தையடையாது.

[ ஜீவத்தன்மை என்பது மாறி மாறி ஸுகத்தையும் துக்கத்தையும் அனுபவிக்கும் நிலை. இது ஸ்வாபாவிகமல்ல என்று முன்னுல் கூறப்பட்டது. திராவகத்தின் சேர்க்கையால் இரும்பு தங்கமாக மாறுவதுபோல சில உயர்ந்த ஸாதனங்களை அப்யாஸம் செய்தால் ஜீவன் ப்ரஹ்மமாக ஆய்விடுகிருன் என்று சிலர் சொல்கிருர்கள். இதுவும் சரியல்ல திராவகத்தின் வீர்யம் உள்ளவரைதான் இரும்பு தங்கமாகத் தோன்றுமே தவிர வீர்யம் போய்விட்டால் மறுபடியும் இரும்பாக ஆகிவிடும். ஆகவே திராவகத்தால் இரும்பு தங்கமாகத் தோன்றினுலும் இரும்பின் தன்மை அழிந்துபோகவில்லை. மறைந்து இருக்கிறது என்றுதான் சொல்லவேண்டும். இதுபோல் ஸாதனுப்யாஸத்தால் ஜீவன் ப்ரஹ்மமாகத் தோன்றினுலும் ஜீவத்தன்மை கூடவே மறைந்திருக்கிறது அது அடியோடு அழிந்துபோகவில்லை என்று கூறவேண்டும். ஆகவே தங்கமாகத் தோன்றிய இரும்பு மறுபடியும் இரும்பாகவே ஆய்விடுவது போல் ப்ரஹ்மமாக ஆன ஜீவனும் பின்னேர் ஸமயம் ஜீவத்தன்மையை அதாவது ஸுக துக்கானுபவத்தை அடைவான் என்று ஆகிவிடும். ஆதலால் இந்த வாதமும் சரியல்ல.] (60)

तस्मात् स्वतो यदि स्याज्जीवः सततं स एव जीवः स्यात् ।
एवं यदि परमात्मा परमात्मैवायमिति भवेद्युक्तम् ॥ ६१ ॥

தஸ்மாத் ஸ்வதோ யதி ஸ்யாத் ஜீவ; ஸததம் ஸ ஏவ
ஜீவ: ஸ்யாத் ।
ஏவம் யதி பரமாத்மா பரமாத்மைவாயமிதி பவேத் யுக்தம் ॥

**तस्मात्**-ஆகையால், **जीवः**-ஜீவன், **स्वतो यदि स्यात्**-ஸ்வபாவஸித்தனாக இருப்பானேயாகில், **सततं**-எப்பொழுதும், **सः**-அவன், **जीव एव**-ஜீவனாகவே, **स्यात्**-இருப்பான். **एवं**-இதேபோல், **यदि परमात्मा**-பரமாத்மாவாக இருப்பானேயாகில், **अयं**-இவன், **परमात्मैव**-பரமாத்மாதான், **इति**-என்பது **युक्तं भवेत्**-யுக்தமாக ஆகும்.

ஆகையால் ஜீவன் என்பவன் ஸ்வபாவஸித்தனாயிருப்பானேயாகில் அவன் எப்பொழுதும் ஜீவனாகவேதான் இருக்கவேண்டும். அப்படியே அவன் (ஸ்வபாவத்தில்) பரமாத்மாவாக இருந்தால் அவன் (எப்பொழுதும்) பரமாத்மாவேதான் என்பது நியாயமாகும்.

[ஆகையால் ஜீவத்தன்மையோ, பரமாத்மத் தன்மையோ எது இவனுக்கு இயற்கையாக ஏற்பட்டுள்ளதோ அதுதான் எப்பொழுதும் கூடவே இருக்கும்.]

यदि वा परेण साम्यं जीवश्चेद्भजति साधनबलेन ।
कालेन तदपि कियता नश्यत्येवेति निश्चितं सकलैः ॥ ६२ ॥

யதி வா பரேண ஸாம்யம் ஜீவச்சேத் பஜதி
ஸாதன பலேன ।
காலேன ததபி கியதா நச்யத்யேவேதி நிச்சிதம் ஸகலை: ॥

**यदि वा**-அல்லது, **जीवः**-ஜீவன், **साधनबलेन**-ஸாதனங்களை அப்யாஸம் செய்த பலத்தால், **परेण साम्यं**-பரமாத்மாவுடன் ஸமமாயிருக்கும் தன்மையை, **भजति चेत्**-அடைவானேயாகில், **तदपि**-அதுவும், **कियता कालेन**-கொஞ்ச காலத்

தில், **नश्यत्येव**-அழிந்துபோகத்தான் செய்யும், **इति**-என்று, **सकलैः**-எல்லோராலும், **निश्चितम्**-தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

ஜீவனானவன் ஸாதனங்களின் பலத்தினால் பிரஹ்மத்திற்கு ஸமானமாயிருக்கும் தன்மையை அடைகிறானென்று வைத்துக்கொண்டாலோ, அந்தத் தன்மையும் (புதிதாக உண்டானபடியால்) கொஞ்ச நாள் ஆனவுடன் நசித்தே விடும் என்று எல்லாருமே தீர்மானிக்கிறார்கள். [ஸ்வாபாவிகமாக ஆதிமுதல் இவனிடம் இல்லாமல் மத்தியில் ஏற்பட்ட எதுவும் இவனை விட்டு ஒருகாலத்தில் விலகவே செய்யும்] (62)

तस्मात् परं स्वकीयं देहं मोहात्मकं च संसारम् ।
स्वज्ञानेन ग्रसित्वा पूर्णः स्वयमेव शिष्यते नान्यत् ॥ ६३ ॥

தஸ்மாத் பரம் ஸ்வகீயம் தேஹம் மோஹாத்மகம் ச
ஸம்ஸாரம் ।
ஸ்வஞானேன க்ரஸித்வா பூர்ண: ஸ்வயமேவ ஶிஷ்யதே
நாந்யத் ॥

**तस्मात्**-ஆகையால், **पूर्णः**-எங்கும் வியாபகமாயிருக்கிற ஆத்மா, **परं**-தன்னைக்காட்டிலும் வேறாயும், **स्वकीयं**-தன்னுடையதாயும் உள்ள, **देहं**-சரீரத்தையும், **मोहात्मकं**-அவிவேகரூபமான, **संसारं च**-ஸம்ஸாரத்தையும், **स्वज्ञानेन**-தன்னைப்பற்றிய உண்மை அறிவினால், **ग्रसित्वा**-விழுங்கிவிட்டு, **स्वयमेव**-தான் மட்டுமே, **शिष्यते**-மிஞ்சுகிறான், **अन्यत् न**-வேறொன்றும் இல்லை.

ஆகையால் பரிபூர்ணனாயிருக்கும் ஆத்மா தன்னுடைய தத்வஸ்வரூபத்தை அறிவதினால் தன்னைவிட வேறாகவும் தன்னைச் சேர்ந்ததாகவும் தோன்றுகிற சரீரத்தையும் மோஹ ரூபமான ஸம்ஸாரத்தையும் விழுங்கிவிட்டு (இல்லையென்று செய்துவிட்டு) தான் மாத்திரம் மிஞ்சுகிறான், மிஞ்சுவது வேறு ஒன்றும் கிடையாது.

[ஆத்மா வியாபகன், இவனைவிட வேறு இரண்டாவது பொருள் ஒன்றும் உண்மையில் இல்லை. இந்த தத்வஞானம் ஏற்படாதவரை அக்ஞானத்தால் அவிவேகமும், அதனுல் சரீரம், பிரபஞ்சம் முதலியவையும் தோன்றிக்கொண்டே இருக்கும். அப்பொழுது சரீரத்தை நான் என்றும் பணம் முதலியவற்றை என்னுடையது என்றும் ப்ரமத்தால் எண்ணி துக்கப்படுகிருன். தத்வஞானம் ஏற்பட்டால் அக்ஞானம் விலகி சரீரம் முதலியவையும் மறைந்துவிடும். அத்வைத ஆத்மானுபவம் ஏற்படும்.] (63)

सत्यं ज्ञानमनन्तं प्रकृतं परमात्मरूपमद्वैतम् ।
अवबोधयन्ति निखिलाः श्रुतयः स्मृतिभिः समं समस्ताभिः ॥

ஸத்யம் ஞானமநந்தம் ப்ரக்ருதம் பரமாத்மரூபமத்வைதம் ।
அவபோதயந்தி நிகிலா: ச்ருதய: ஸ்ம்ருதிபி: ஸமம் ஸமஸ்தாபி: ॥

**निखिलाः श्रुतयः**-எல்லாவேதங்களும், **समस्ताभिः स्मृतिभिः समं**-எல்லாஸ்ம்ருதிகளுடன்கூட, **प्रकृतं**-ப்ரக்ருதமான ஜீவனை **सत्यं**-முக்காலத்திலும் மறையாமலுள்ளதும், **ज्ञानं**-சைதன்ய ஸ்வரூபமும், **अनन्तं**-தேசகால வஸ்துக்களால் எல்லையில்லாததும், **अद्वैतं** - ஸஜாதீய, விஜாதீய, ஸ்வகத பேதங்களற்றதுமான, **परमात्मरूपं**-பரமாத்ம ஸ்வரூபமாக, **अवबोधयन्ति**-தெரியப்படுத்துகின்றன.

பிரகிருதமான ஜீவன் ஸத்யம், ஞானஸ்வரூபன், எல்லையற்றவன், பரமாத்மஸ்வரூபன், இரண்டற்றவன், என்று எல்லா வேதங்களும் எல்லா ஸ்மிருதிகளுடன் கூட தெரியப்படுத்துகின்றன. 64

अद्वैतबोधकानां निखिलानां निगमवाक्यजालानाम् ।
वाक्यान्तराणि सकलान्यभिधीयन्ते स्म शेषभूतानि ॥ ६५ ॥

அத்வைதபோதகாநாம் நிகிலாநாம் நிகமவாக்யஜாலாநாம் ।
வாக்யாந்தராணி ஸகலாந்யபிதீயந்தே ஸ்ம சேஷபூதானி ॥

**अद्वैतबोधकानां**-அத்வைத தத்வத்தை உணர்த்துகிற, **निखिलानां**-எல்லா, **निगमवाक्यजालानां**-வேதவாக்ய ஸமூஹங்களுக்கும், **सकलानि वाक्यान्तराणि**-மற்ற எல்லா வாக்யங்களும் **शेषभूतानि**-அங்கமாக உள்ளதாக, **अभिधीयन्ते स्म**-சொல்லப்பட்டிருக்கின்றன.

அத்வைத தத்வத்தை உணர்த்தும் எல்லா வேத வாக்ய ஸமூகங்களுக்கும் சேஷம்தான் (உள்ளடங்கினவைதான்) மற்ற எல்லா வாக்கியங்களும் என்று சொல்லப்பட்டிருக்கின்றன.

[வேதத்தில் சில வாக்கியங்கள் அத்வைதத்தையும், சில வாக்கியங்கள் த்வைதத்தையும் கூறுகின்றன. முன் சொல்லப்பட்ட பல காரணங்களால் வேதத்திற்கு அத்வைதத்திலேயே தாத்பர்யமானபடியால் அத்வைத வாக்யங்கள்தான் முக்யமானவை; த்வைத வாக்யங்கள் இதற்கு அங்கம். முக்யமான அத்வைதத்திற்கு விரோதமில்லாமல் அதை ஒட்டித்தான் த்வைத வாக்கியங்களின் கருத்தைக் கூறவேண்டும்.] 65

ஞானம் கர்மாவுடன் சேராது:—

यस्मिन् मिहिरवदुदिते तिमिरवदपयान्ति कर्तृतादीनि ।
ज्ञानं विरहितभेदं कथमिव तद्भवति तत्त्वमस्यादेः ॥ ६६ ॥

யஸ்மின் மிஹிரவதுதிதே திமிரவதபயாந்தி
கர்த்ருதாதீனி ।
ஞானம் விரஹிதபேதம் கதமிவ தத் பவதி
தத்த்வமஸ்யாதேः ॥

**यस्मिन्**-எந்த ஞானம், **मिहिरवत्**-ஸூர்யன்போல், **उदिते**-உதயமானவுடன், **कर्तृतादीनि**-செய்கிற தன்மை முதலியவை, **तिमिरवत्**-இருள்போல, **अपयान्ति**-விலகிச் செல்கின்றனவோ, **तत्**-அந்த, **विरहितभेदं**-வேற்றுமையற்ற **ज्ञानं**-ஞானமானது, **तत्त्वमस्यादेः**-'தத்த்வமஸி' முதலான

வாக்யத்திலிருந்து, **कथमिव**-எப்படியோ, **भवति**-ஏற்படுகிறது.

எந்த ஞானம் ஏற்பட்டால், ஸூர்யன் உதித்தால் இருட்டு விலகுவதுபோல 'நான் செய்கின்றவன்' முதலான வைகளெல்லாம் விலகிவிடுமோ அந்த வேற்றுமையற்ற ஞானம் தத் த்வம் அஸி "நீ அது" என்பது முதலான வாக்யங்களிலிருந்து சிரமப்பட்டு ஏற்படுகிறது (66)

**कर्मप्रकरणनिष्ठं ज्ञानं कर्माङ्गमिष्यते प्राज्ञैः ।**
**भिन्नप्रकरणभाजः कर्माङ्गत्वं कथं भवेज्ज्ञप्तेः ॥ ६७ ॥**

*கர்மப்ரகரண நிஷ்டம் ஞானம் கர்மாங்கமிஷ்யதே ப்ராஜ்ஞை: ।*
*பிந்ந ப்ரகரணபாஜ: கர்மாங்கத்வம் கதம் பவேத் ஞப்தே: ॥*

**कर्मप्रकरणनिष्ठं**-கர்மாக்களைச் சொல்லிவருகின்ற ப்ரகரணத்திலுள்ள, **ज्ञानं**-ஞானமானது, **कर्माङ्गं**-கர்மாவின் அங்கமாக, **प्राज्ञैः**-அறிவாளிகளால், **इष्यते**-விரும்பப்படுகிறது. **भिन्नप्रकरणभाजः**-வேறு ப்ரகரணத்திலுள்ள, **ज्ञप्तेः**-ஞானத்திற்கு, **कर्माङ्गत्वं**-கர்மாவின் அங்கமாயிருக்கும் தன்மை, **कथं भवेत्**? எப்படி ஏற்படும்?

கர்மாக்களை சொல்லிவரும் ஸந்தர்ப்பத்தில் சொல்லப்படும் ஞானம் என்பது அந்தந்த கர்மாக்களுக்கு அங்கமாயுள்ளதென்று அறிவாளிகள் கருதுகிறார்கள். (கர்மாவிற்கு ஸம்பந்தமேயில்லாத) வேறு ஸந்தர்ப்பத்தில் (ஞான காண்டத்தில்) உள்ள ஞானத்திற்கு கர்மாவின் அங்கத் தன்மை எப்படி ஏற்படும்? (67)

**अधिकारिविषयभेदौ कर्मज्ञानात्मकावुभौ काण्डौ ।**
**एवं सति कथमनयोरङ्गाङ्गित्वं परस्परं घटते ॥ ६८ ॥**

*அதிகாரி விஷய பேதௌ கர்ம ஞானாத்மகாவுபௌ காண்டௌ ।*
*ஏவம் ஸதி கதமநயோரங்காங்கித்வம் பரஸ்பரம் கடதே ॥*

**कर्मज्ञानात्मकौ**-கர்மரூபமாயும், ஞானரூபமாயுமுள்ள, **उभौ काण्डौ**-இரண்டு காண்டங்களும், **अधिकारिविषयभेदौ**-வெவ்வேறுன அதிகாரியையும் விஷயத்தையும் உடையவை. **एवं सति**-இப்படி இருக்கும்பொழுது, **अनयोः**-இவ்விரண்டிற்கும், **परस्परं**-ஒன்றுக்கொன்று, **अङ्गाङ्गित्वं**-அங்கமாகவும் ப்ரதானமாகவும் இருக்கும் தன்மை, **कथं घटते**-எவ்விதம் பொருந்தும்?

கர்ம பரமாயும் ஞானபரமாயுமுள்ள இரண்டு காண்டங்களுக்கும் அதிகாரிகள் வெவ்வேறு, விஷயங்களும் வெவ்வேறு; அப்படியிருக்க, (கர்மா, ஞானம், ஆகிய) இரண்டிற்கும் ஒன்று அங்கம், மற்றென்று அங்கி, என்று ஒன்றுக்கொன்று ஸம்பந்தம் எப்படிப் பொருந்தும்? (68)

ज्ञानं कर्मणि न स्याज्ज्ञाने कर्मेदमपि तथा न स्यात् ।
तत्कथमनयोरुभयोस्तपनतमोवत् समुच्चयो घटते ॥ ६९ ॥

ஞானம் கர்மணி ந ஸ்யாத் ஞானே கர்மேதமபி ததா ந
ஸ்யாத் ।
தத் கதமநயோருபயோஸ்தபநதமோவத் ஸமுச்சயோ
கடதே ॥

**कर्मणि**-கர்மா இருந்தால், **ज्ञानं न स्यात्**-ஞானம் இருக்காது. **तथा**-அப்படியே, **ज्ञाने**-ஞானம் இருந்தால், **इदं कर्मापि**-இந்த கர்மாவும், **न स्यात्**-இருக்காது. **तत्**-ஆகையால், **अनयोरुभयोः**-இவ்விரண்டிற்கும், **तपनतमोवत्**-ஸூரியனுக்கும் இருளுக்கும்போல, **समुच्चयः**-சேர்ந்திருப்பது, **कथं घटते**-எப்படிப் பொருந்தும்?

கர்மா இருந்தால் ஞானம் இராது. அப்படியே ஞானமிருந்தால் இந்தக் கர்மாவும் இராது. அப்படியிருக்க, ஸூர்யனும் இருட்டும் எப்படி சேர்ந்திருக்கமுடியாதோ அப்படியே இவை (கர்மா, ஞானம்) இரண்டும் சேர்ந்திருப்பது எப்படி முடியும்? (69)

तस्मान्मोहनिवृत्तौ ज्ञानं न सहायमन्यमर्थयते ।
यद्वद्घनतरतिमिरप्रकरपरिध्वंसने सहस्रांशुः ॥ ७० ॥

தஸ்மான் மோஹ நிவ்ருத்தெள ஞானம் ந
ஸஹாயமந்யமர்த்தயதே ।
யத்வத் கனதர திமிர ப்ரகர பரித்வம்ஸனே
ஸஹஸ்ராம்ஶு: ॥

**तस्मात्**-ஆகையால், **घनतरतिमिरप्रकरपरिध्वंसने**-மிகவும் அடர்த்தியான இருள் கூட்டங்களை அழிப்பதில், **यद्वत् सहस्रांशुः**-ஸூர்யன் எப்படியோ (அப்படியே), **मोहनिवृत्तौ**-அக்ஞானத்தைப் போக்குகிற விஷயத்தில், **ज्ञानं**-ஞானமானது, **अन्यं सहायं**-வேறு உதவியை, **न अर्थयते**-எதிர்பார்க்கிறதில்லை.

ஆகையால் மோஹத்தைப் போக்கடிக்கிற விஷயத்தில் ஞானமானது வேறு எந்த ஸஹாயத்தையும் அபேக்ஷிக்கிறதில்லை. எவ்வளவு கனமான இருட்டுக் கூட்டமாயிருந்தாலும் அதைப் போக்கடிக்கிற விஷயத்தில் ஸூர்யன் (எப்படி வேறு ஸஹாயத்தைத் தேடுவதில்லையோ) அதே போல.

[ஞானகர்ம ஸமுச்சயவாதத்தை அதாவது ஞானம் கர்மா இரண்டும் சேர்ந்துதான் முக்தியைத் தருகிறது என்று சிலர் சொல்வதை ஐந்து சுலோகங்களால் கண்டிக்கிறார். வேதத்தில் கர்மகாண்டம் ஞானகாண்டம், என்று இரு பிரிவுகள் இருக்கின்றன. கர்மகாண்டம் கர்மாக்களைக் கூறுகிறது. ஞானகாண்டம் ஞானத்தைப்பற்றிக் கூறுகிறது. இந்த ஞானம் கர்மாவுக்கு அங்கமாக ஆகாது. கர்மகாண்டத்திலேயே உள்ள தேவதை கர்மா இவற்றின் ஞானம் கர்மாவுக்கு அங்கமாக ஆகலாம். கர்ம காண்டத்துடன் ஸம்பந்தமில்லாமல் தனிப்பிரகரணமாக அமைந்துள்ள ஞானகாண்டத்தில் சொல்லப்பட்ட ஞானம் எப்படி கர்மாவுக்கு அங்கமாக ஆகும்? மேலும் கர்ம காண்டத்தில் சொல்லப்பட்ட விஷயம் வேறு. ஞான காண்டத்தில்

சொல்லப்பட்ட விஷயம் வேறு. காமனை உள்ளவன் சரீராதிகளில் அபிமானம் கொண்டு தன்னை கர்த்தா என்று நினைக்கிறவன் கர்மாவில் அதிகாரி, விரக்தன், அபிமான மற்றவன், அகர்த்தா என்று எண்ணுபவன் ஞானத்தில் அதிகாரி இவ்வாறு அதிகாரியும் விஷயமும் வெவ்வேருக இருப்பதாலும் இரண்டும் சேர்ந்து பலனைத் தருவதாகக் கூறமுடியாது. மேலும் ஞானியிடம் கர்மா இருக்காது. கர்மாவைச் செய்பவனிடம் ஞானம் இருக்காது. ஞானமும் கர்மாவும் வெளிச்சமும் இருளும்போல் ஒன்றுக்கொன்று நேர் எதிரிடையானது. அதனாலும் ஞானகர்ம ஸமுச்சய வாதம் சரியல்ல. உண்மையான ஞானியிடம் உலகத்தை யொட்டி ஏதாவது கர்மா காணப்படுமேயானால் அது சரியான கர்மாவல்ல கர்மாபாஸம் தான். ஆகவே ஞானம் தான் தனியாக இருந்துதான் அஞ்ஞானத்தை ஒழித்து முக்தியைத் தருகிறது கர்மாவை எதிர்பார்ப்ப தில்லை.] (70)

ज्ञानं तदेवममलं साक्षी विश्वस्य भवति परमात्मा ।
संबध्यते न धर्मैः साक्षी तैरेव सच्चिदानन्दः ॥ ७१ ॥

ஞானம் ததேவமமலம் ஸாக்ஷீ விச்வஸ்ய பவதி பரமாத்மா ।
ஸம்பத்யதே ந தர்மைः ஸாக்ஷீ தைரேவ ஸச்சிதானந்த: ॥

**विश्वस्य साक्षी**-பிரபஞ்சத்தை நேரில் அறிந்துகொள்கிற, **परमात्मा**-பரமாத்மாவானவர், **एवं**-இவ்விதமான, **तत्**-அந்த, **अमलं**-சுத்தமான, **ज्ञानं**-ஞான ஸ்வரூபியாக, **भवति**-இருக்கிறார். **सच्चिदानन्दः**-ஸத்தாகவும் சித்தாகவும் ஆனந்தமாகவும், **साक्षी**-ஸாக்ஷியாகவும் உள்ள பரமாத்மா, **तैः धर्मैः**-அந்த பிரபஞ்ச தர்மங்களுடன், **नैव संबध्यते**-ஸம்பந்தப்படவே மாட்டார்.

இவ்விதமுள்ள அந்த சுத்தமான ஞானஸ்வரூபியான பரமாத்மாவானவர் ஸகல ஜகத்திற்கும் ஸாக்ஷியாக இருக்கிறார். ஸாக்ஷியாயிருப்பவர் (பார்க்கப்படும் ஜகத்தினுடைய) அந்த தர்மங்களோடு ஸம்பந்தப்படமாட்டார்.

ஸத்தாகவும், சித்ஸ்வரூபராகவும், ஆனந்தரூபியாகவுமே இருப்பார். (71)

रज्ज्वादेरुरगाद्यैः संबन्धवदस्य दृश्यसंबन्धः ।
सततमसङ्गोऽयमिति श्रुतिरप्यमुमर्थमेव साधयति ॥ ७२ ॥

ரஜ்ஜ்வாதேருரகாத்யை: ஸம்பந்தவதஸ்ய த்ருச்யஸம்பந்த: ।
ஸததமஸங்கோऽயமிதி ச்ருதிரப்யமுமர்த்தமேவ ஸாதயதி॥

**रज्ज्वादेः**-(அதிஷ்டானமான) கயிறு முதலானவற்றிற்கு **उरगाद्यैः**-(அதில் தோன்றும்) பாம்பு முதலானவைகளுடன், **संबन्धवत्**-சேர்க்கைபோல்தான், **अस्य**-இந்த பரமாத்மாவிற்கு **दृश्यसंबन्धः**-பார்க்கப்படும் வஸ்துக்களுடன் ஸம்பந்தம். **अयं**-இவர், **सततं**-எப்பொழுதும், **असङ्गः**-ஒட்டாதவர், **इति**-என்று, **श्रुतिरपि**-வேதமும், **अमुमर्थमेव**-இதே விஷயத்தை, **साधयति**-தீர்மானிக்கிறது.

கயிறு முதலானவைகளுக்கும் (அவைகளில் தோன்றும்) பாம்பு முதலானவைகளுக்கும் என்ன ஸம்பந்தமோ அந்த ஸம்பந்தம் போலத்தான் இந்த (ஸாக்ஷியான) ஆத்மாவிற்கும், பார்க்கப்படும் ஜகத்திற்கும் உள்ள ஸம்பந்தம். இவர் எப்பொழுதும் சேர்க்கையற்றவர் என்று வேதமும் இதே அர்த்தத்தை தீர்மானித்துக் கொடுக்கிறது.

[ஆத்மா சுத்தமான ஞானஸ்வரூபன். அவன் ஸாக்ஷி. பிரபஞ்சத்தை அறிந்துகொள்கிறான். ஆகவே பார்க்கும் ஆத்மாவுக்குப் பார்க்கப்படும் பிரபஞ்சத்துடன் ஸம்பந்தம் கிடையாது தனக்கு ஸம்பந்தமில்லாமல் நன்கு தெரிந்து கொள்கிறவனைத்தான் "ஸாக்ஷி" என்று சொல்வது உலக வழக்கம் மேலும் ஆத்மாவில் பிரபஞ்சம் கல்பிதம். அதிஷ்டானமான ஆத்மாவுக்கு ஆரோபிதமான பிரபஞ்சத்துடன் எப்படி ஸம்பந்தம் ஏற்படும்? ப்ரமத்தால் ஆகாயம் நீலமாகத்தோன்றுவதால் கொஞ்சமாவது அதற்கு நீலநிறம் ஏற்படுகிறதா? இதனால்தான் ஆத்மாவை "அஸங்கம்" என்று உபநிஷத் கூறுகிறது.] (72)

कर्तृ च कर्म च यस्य स्फुरति ब्रह्मैव तन्न जानाति ।
यस्य न कर्तृ न कर्म स्फुटतरमयमेव वेदितुं क्रमते ॥ ७३ ॥

கர்த்ரு ச கர்ம ச யஸ்ய ஸ்புரதி ப்ரஹ்மைவ
தந்ந ஜாநாதி ।
யஸ்ய ந கர்த்ரு ந கர்ம ஸ்புடதரமயமேவ
வேதிதும் க்ரமதே ॥

यस्य-எவனுக்கு, कर्तृ च-செய்கிறவனும், कर्म च-செயலும் स्फुरति-தோன்றிக்கொண்டிருக்கிறதோ (அவன்), तत् ब्रह्म-அந்த ப்ரஹ்மத்தை, नैव जानाति-அறியவேமாட்டான். यस्य-எவனுக்கு, कर्तृ-செய்கிறவன் என்பது, न-தோன்றவில்லையோ, कर्म-செயலும், न-தோன்றவில்லையோ, अयमेव-இவனே, स्फुटतरं-மிகத்தெளிவாக, वेदितुं-அறிந்துகொள்வதற்கு, क्रमते-ஆரம்பிக்கிருன்.

எவனுக்கு செய்கிறவன் என்றும், செயல் என்றும் தோன்றிக்கொண்டிருக்கிறதோ அவன் அந்த பிரஹ்மத்தை கொஞ்சமேனும் அறியமாட்டான். எவனுக்கு செய்கிறவன் என்பதும் செயல் என்பதும் கிடையாதோ அவன்தான் நன்கு தெளிவாக (அந்த பிரஹ்மத்தை) அறியமுடியும். (73)

कर्तृत्वादिकमेतन्मायाशक्त्या प्रपद्यते निखिलम् ।
इति केचिदाहुरेषा भ्रान्तिर्ब्रह्मातिरेकतो नान्यत् ॥ ७४ ॥

கர்த்ருத்வாதிகமேதன் மாயாமக்த்யா ப்ரபத்யதே நிகிலம் ।
இதி கேசிதாஹுரேஷா ப்ராந்திர் ப்ரஹ்மாதிரேகதோ
நாந்யத் ॥

एतत्-இந்த, कर्तृत्वादिकं निखिलं-கர்த்ருத்வம் முதலானவை எல்லாம், मायाशक्त्या-மாயையின் சக்தியால், प्रपद्यते-ஏற்படுகிறது, इति-என்று, केचित्-சிலர், आहुः-சொல்கிருர்கள். एषा-இது, भ्रान्तिः-ப்ராந்தி (தவருன எண்ணம்). ब्रह्मातिरेकतः-ப்ரஹ்மத்தைக்காட்டிலும் தனியாக, अन्यत्-வேறு ஒன்றும், न-கிடையாது.

கர்த்ருத்வம் முதலான இவையெல்லாம் (பிரஹ்மத்திற்கு வேறுபட்டதான) மாயையின் சக்தியினால் ஏற்படுகிறதென்று சிலர் சொல்லுகிறார்கள். அது பிராந்தியேயாகும். பிரஹ்மத்திற்கு வேறாக யாதொன்றும் கிடையாது.

[இன்னவிதமென்று சொல்லமுடியாமல் அக்ஞான தசையில் மட்டும் ப்ரஹ்மத்தில் தோன்றிக்கொண்டிருக்கும் ஓர் சக்திதான் மாயை என்பது. ஞானம் வந்தவுடன் இந்த மாயையும் மறைந்துபோய்விடுவதால் அதுவும் உண்மைப் பொருளல்ல.] (74)

**ஜகத்தின் காரணம் ஸத்வஸ்து :—**

तस्मिन् ब्रह्मणि विदिते विश्वमशेषं भवेदिदं विदितम् ।
कारणमृदि विदितायां घटकरकाद्या यथाऽवगम्यन्ते ॥ ७५ ॥

தஸ்மின் ப்ரஹ்மணி விதிதே விச்வமசேஷம் பவேதிதம் விதிதம் ।
காரணம்ருதி விதிதாயாம் கடகரகாத்யா யதாZவகம்யந்தே ॥

**तस्मिन् ब्रह्मणि**-அந்தப்ரஹ்மம், **विदिते**-அறிந்துகொள்ளப் பட்டவுடன், **इदं**-இந்த, **विश्वमशेषं**-பிரபஞ்சம் முழுவதும், **विदितं भवेत्**-அறிந்துகொள்ளப்பட்டதாக ஆகும். **कारणमृदि**-காரணமான மண், **विदितायां**-அறிந்துகொள்ளப்பட்ட பொழுது, **घटकरकाद्याः**-குடம், கரகம் முதலானவை, **यथा**-எப்படி, **अवगम्यन्ते**-அறியப்படுகின்றனவோ.

காரணமான மண்ணை அறிந்துவிட்டால் எப்படி குடம், கரகம் முதலானவைகள் (மண்ணின் கார்யமானவைகள்) அறியப்படுகின்றனவோ அப்படியே பிரஹ்மத்தை அறிந்து விட்டால் இந்தப் பிரபஞ்சம் பூராவுமே அறியப்பட்டதாகும்.

तदिदं कारणमेकं विगतविशेषं विशुद्धचिद्रूपम् ।
तस्मात् सदेकरूपान्मायोपहितादभूदिदं विश्वम् ॥ ७६ ॥

ததிதம் காரணமேகம் விகதவிஶேஷம் விஶுத்தசித்ரூபம் |
தஸ்மாத் ஸதேகரூபான் மாயோபஹிதாதபூதிதம் விச்வம் ||

तदिदं-அந்த இந்த, कारणं-காரணவஸ்து, एकं-ஒன்று, विगतविशेषं-சிறப்புகளற்றது, विशुद्धचिद्रूपं-மாசற்ற சைதன்ய வடிவமானது. तस्मात्-அந்த, मायोपहितात्-மாயையுடன்கூடிய, सदेकरूपात्-ஒரே ரூபமான ஸத் வஸ்துவிலிருந்து, इदं-இந்த, विश्वं-பிரபஞ்சம், अभूत्-உண்டானது.

இந்த காரணவஸ்து ஒன்ருகவும், விசேஷமற்றதாகவும் சுத்தமான சைதன்ய ரூபமாயுமுள்ளது. ஸத்தாகவும் ஒன்ருகவுமிருக்கிற வஸ்து மாயை என்ற உபாதியுடன் ஸம்பந்தப்படும்போது அதிலிருந்து இந்த பிரபஞ்சம் உண்டாயிற்று.

[மண்ணினுல் குடம், பானை சால் முதலான பல பாத்திரங்களைக் குயவன் செய்கிருன். கார்யம் அநேகமாகவும், பல வடிவமாகவும் ஆகின்றன. காரணமான மண்ணோ ஒன்றுதான். ஒரே வடிவமுள்ளது. இதுபோல பிரபஞ்சம் பலவாக இருந்தாலும் காரணமான ஸத்வஸ்து (ப்ரஹ்மம்) ஒன்றுதான், வடிவமற்றது. சுத்த சைதன்யமான இது மாயையுடன் சேர்ந்து பிரபஞ்சத்தை உண்டு பண்ணுகிறது.] (76)

कारणमसदिति केचित् कथयन्त्यसतो भवेन्न कारणता ।
अंकुरजननी शक्तिः सति खलु बीजे समीक्ष्यते सकलैः ॥

காரணமஸதிதி கேசித் கதயந்த்யஸதோ பவேத் ந காரணதா |
அங்குரஜனனீ ஶக்தி: ஸதி கலு பீஜே ஸமீக்ஷ்யதே ஸகலை: ||

असत्-அஸத்துத்தான் (இல்லாதது), कारणं-காரணம் इति-என்று, केचित्-சிலர், कथयन्ति-சொல்கிருர்கள். असतः-இல்லாததற்கு, कारणता-காரணமாயிருக்கும் தன்மை, न भवेत्-ஏற்படாது. सति बीजे-(முன்னுல்) இருக்கும் விதையில்தான், अंकुरजननी-முளையை உண்டுபண்ணும், शक्तिः-

சக்தி, सकलैः-எல்லோராலும், समीक्ष्यते खलु-பார்க்கப் படுகிறதல்லவா!

காரணம் அஸத் (இல்லாதது) என்று சிலர் சொல்கிறார்கள். இல்லாததற்குக் காரணத்தன்மை இருக்கமுடியாது. முளை வரும்படி செய்யும் சக்தி விதையிருந்தாலல்லவா ஏற்படுமென்பதை எல்லாரும் பார்த்திருக்கிறார்கள்.

[ஸத்தான (எப்பொழுதும் இருக்கிற) ப்ரஹ்மத்திலிருந்து பிரபஞ்சம் ஏற்பட்டிருக்கிறது என்பது ஸித்தாந்தம். ஸிருஷ்டிக்கு முன்னால் ஒன்றுமேயில்லை திடீரென பிரபஞ்சம் ஏற்பட்டது என்று சிலர் சொல்கிறார்கள். இவர்கள் அஸத் காரணவாதிகள். இவர்கள் சொல்வது சரியல்ல. முன்னால் விதை இருந்துதான் முளை உண்டாகிறதே தவிற ஒன்றும் இல்லாமல் முளை உண்டாவதில்லை] (77)

कारणमसदिति कथयन् वन्ध्यापुत्रेण निर्वहेत् कार्यम् ।
किं च मृगतृष्णिकाम्भः पीत्वोदन्यां महीयसीं शमयेत् ॥

காரணமஸதிதி கதயன் வந்த்யா புத்ரேண நிர்வஹேத் கார்யம் |
கிம்ச ம்ருகத்ருஷ்ணிகாம்ப: பீத்வோதந்யாம் மஹீயஸீம் ஶமயேத் ||

असत्-இல்லாதது, कारणं-காரணம், इति-என்று, कथयन्-சொல்கிறவன், वन्ध्यापुत्रेण-மலடி மகனால், कार्यं-காரியத்தை, निर्वहेत्-நடத்துவான். किंच-மேலும், मृगतृष्णिकाम्भः-கானல் நீரை, पीत्वा-குடித்து, महीयसीं-அதிகமான, उदन्यां-தாஹத்தை, शमयेत्-போக்கிக்கொள்வான்.

காரணம் அஸத் (இல்லாதது) என்று சொல்வானேயாகில், அவன் மலடி மகனைக்கொண்டு கார்யங்களை நடத்திக் கொள்வான், தவிரவும் கானல் ஜலத்தைக் குடித்து பெரும் தாஹத்தை சமனம் செய்து கொள்வான்.

यस्मान्न सोऽयमसतो वादः संभवति शास्त्रयुक्तिभ्याम् ।
तस्मात् सदेव तत्त्वं सर्वेषां भवति कारणं जगताम् ॥ ७९ ॥

யஸ்மாத் ந ஸோऽயமஸதோ வாத: ஸம்பவதி
ஶாஸ்த்ர யுக்திப்யாம் ॥
தஸ்மாத் ஸதேவ தத்வம் ஸர்வேஷாம் பவதி காரணம்
ஜகதாம் ॥

**यस्मात्**-யாதொரு காரணத்தினால், **सोयं**-அந்த இந்த, **असतो वादः**-அஸத் காரணவாதம், **शास्त्रयुक्तिभ्यां**-சாஸ்திரத்தாலும் யுக்தியாலும், **न संभवति**-பொருந்தவில்லையோ, **तस्मात्** -அந்தக் காரணத்தால், **सदेव तत्वं**-ஸத்தான (எப்பொழுதும் இருக்கிற) தத்வம்தான், **सर्वेषां जगतां**-எல்லா பிரபஞ்சத்திற்கும், **कारणं भवति**-காரணமாக ஆகிறது.

அஸத்திலிருந்து உண்டாகிறதென்ற வாதம் சாஸ்திரத்திற்கும் யுக்திக்கும் பொருந்தாததால், எல்லா ஜகத்துக்களுக்கும் காரணமாயிருப்பது ஸத்தான (இருப்புடைய) தத்வமேயாகும். (79)

जगदाकारतयाऽपि प्रथते गुरुशिष्यविग्रहतयाऽपि ।
ब्रह्माकारतयाऽपि प्रतिभातीदं परात्परं तत्त्वम् ॥ ८० ॥

ஜகதாகாரதயாऽபி ப்ரததே குரு ஶிஷ்ய விக்ரஹதயாऽபி ।
ப்ரஹ்மாகாரதயாऽபி ப்ரதிபாதீதம் பராத்பரம் தத்வம் ॥

**परात्परं**-மேலான வஸ்துவிற்கும் மேலாக இருக்கும், **इदं तत्वं**-இந்த ஸத்ரூபமான தத்வமானது, **जगदाकारतयाऽपि**-பிரபஞ்ச உருவமாகவும், **गुरुशिष्यविग्रहतयाऽपि**-குருசிஷ்ய வடிவமாகவும், **प्रथते**-பிரஸித்தமாக இருக்கிறது (இதுவே), **ब्रह्माकारतयाऽपि**-ப்ரஹ்மஸ்வரூபமாகவும், **प्रतिभाति**-தோன்றுகிறது.

மேலானதிற்கும் மேலானதாயிருக்கும் இந்த தத்வமே பிரபஞ்சரூபமாயும் குருசிஷ்ய ரூபமாயும் பிரஹ்மாகாரமாகவும் விளங்குகிறது

[பாம்பாகத் தோன்றும் கயிறில் ஒருவித மாறுபாடும் ஏற்படுகிறதில்லை. பிராந்தி உள்ளவனுக்கு பாம்பாகத் தோன்றினும் ப்ராந்தி இல்லாதவனுக்கு அதுவே கயிருகத் தெரிகிறது. இதுபோல் அக்ஞானிகளுக்கு பிரபஞ்ச உருவ மாகத்தென்படும் பரதத்வம் ஒருவித மாறுபாட்டையும் அடையாமல் ஞானிகளுக்கு ப்ரஹ்மமாகத்தெரிகிறது மேலும் பிரபஞ்சத்தைப் பொய் என்று உபதேசிக்கும் குருவாகவும் அந்த ஞானத்தைப் பெறுகின்ற சிஷ்யனுகவும் தோன்று வதும் பரவஸ்துதான்] (80)

सत्यं जगदिति भानं संसृतये स्यादपक्वचित्तानाम् ।
तस्मादसत्यमेतन्निखिलं प्रतिपादयन्ति निगमान्ताः ॥ ८१ ॥

ஸத்யம் ஜகதிதி பானம் ஸம்ஸ்ருதயே
ஸ்யாதபக்வசித்தானும் ।
தஸ்மாதஸத்யமேதத் நிகிலம் ப்ரதிபாதயந்தி நிகமாந்தா: ॥

**जगत् सत्यं**-பிரபஞ்சம் உண்மை, **इति**-என்ற, **भानं**-தோற்றமானது, **अपक्वचित्तानां**-ஸாதனங்களை அனுஷ்டித்து மனப்பரிபாகம் அடையாதவர்களுக்கு, **संसृतये स्यात्**-ஸம்ஸாரத்தின் பொருட்டு ஆகும். **तस्मात्**-ஆகையால் **एतत् निखिलं**-இது எல்லாவற்றையும், **असत्यं**-பொய்யாக, **निगमान्ताः**-உபநிஷத்துக்கள், **प्रतिपादयन्ति**-விளக்குகின்றன.

பரிபாகமடையாத மனஸுள்ளவர்களுக்கு ஜகத் ஸத்யம் என்ற தோற்றமேற்பட்டு ஸம்ஸாரத்திற்கே காரண மாகிறது. ஆகையால் இது எல்லாம் அஸத்யம் என்று வேதாந்தங்கள் எடுத்துச்சொல்கின்றன. (81)

परिपक्वमानसानां पुरुषवराणां पुरातनैः सुकृतैः ।
ब्रह्मैवेदं सर्वं जगदिति भूयः प्रबोधयत्येषः ॥ ८२ ॥

பரிபக்வமானஸாநாம் புருஷவராணும் புராதனை:
ஸுக்ருதை: ।
ப்ரஹ்மைவேதம் ஸர்வம் ஜகதிதி பூய: ப்ரபோதயத்யேஷ: ॥

**पुरातनैः सुकृतैः**-முன்னால் செய்துள்ள புண்யங்களால், **परिपक्वमानसानां**-பரிசுத்தமான மனமுள்ள, **पुरुषवराणां**-சிறந்த புருஷர்களுக்கு, **एषः**-இந்த வேதமானது, **इदं जगत् सर्वं**-இந்த பிரபஞ்சம் முழுவதும், **ब्रह्मैव**-ப்ரஹ்மம்தான், **इति**-என்று, **भूयः**- அடிக்கடி, **प्रबोधयति**-அறிவுறுத்துகிறது.

முன்னால் ஸம்பாதிக்கப்பட்ட புண்ய கர்மாக்களினால் பரிபக்வமாயுள்ள மனதையுடைய புருஷ சிரேஷ்டர்களுக்கு இந்த வேதமே இந்த எல்லா ஜகத்தும் பிரஹ்மமே என்று வெகுவாகத் தெரிவிக்கிறது. (82)

अनवगतकाञ्चनानां भूषणधीरेव भूषणे हैमे ।
एवमविवेकभाजां जगति जनानां न तात्त्विकी धिषणा ॥

அநவகத காஞ்சநாநாம் பூஷணதீரேவ பூஷணே ஹைமே ।
ஏவமவிவேகபாஜாம் ஜகதி ஜநாநாம் ந தாத்விகீ திஷணா ॥

**अनवगतकाञ्चनानां**-தங்கத்தையே அறியாதவர்களுக்கு, **हैमे**-தங்கத்தாலாகிய, **भूषणे**-ஆபரணத்தில், **भूषणधीरेव**-நகை என்ற எண்ணம்தான் ஏற்படும். (தங்கம் என்ற அறிவு ஏற்படாது). **एवं**-இதுபோல், **अविवेकभाजां**-ஆத்மாவைப் பற்றிய விவேகம் இல்லாத, **जनानां**-ஜனங்களுக்கு, **जगति**-பிரபஞ்சத்தில், **तात्त्विकी धिषणा**-உண்மைப் பொருளான ப்ரஹ்மத்தின் ஞானம், **न**-ஏற்படாது

தங்கம் என்றால் என்னவென்று தெரியாதவர்களுக்கு தங்கத்தினால் செய்யப்பட்டிருக்கிற நகையில் நகை என்ற எண்ணம்தான் இருக்கும். அப்படியே விவேகமில்லாத ஜனங்களுக்கு ஜகத்தில் தத்வ விஷயமான புத்தி இராது.

अहमालम्बनसिद्धं कस्य परोक्षं भवेदिदं ब्रह्म ।
तदपि विचारविहीनैरपरोक्षयितुं न शक्यते मुग्धैः ॥ ८४ ॥

அஹமாலம்பனஸித்தம் கஸ்ய பரோக்ஷம் பவேதிதம் ப்ரஹ்ம ।
ததபி விசாரவிஹீநைரபரோக்ஷயிதும் ந ஶக்யதே முக்தை: ॥

**अहमालम्बनसिद्धं**–'நான்' என்ற ஞானத்திற்கு ஆதாரமாக இருப்பதால் பிரஸித்தமாக உள்ள, **इदं ब्रह्म**–இந்த ப்ரஹ்மம், **कस्य**-எவனுக்குத்தான், **परोक्षं**-நேரில் அறியக்கூடாததாக, **भवेत्**-இருக்கும்? **तदपि**-அப்படியிருந்தும், **विचारविहीनैः**–விசாரம் செய்யாத, **मुग्धैः**-மூடர்களால், **अपरोक्षयितुं**–நேரில் தெரிந்துகொள்வதற்கு, **न शक्यते**-முடியவில்லை.

நான் நான் என்பதைத் தழுவி பிரஸித்தமாயிருக்கிற இந்த பிரஹ்மம் யாருக்குத்தான் அறியாத வெளி பதார்த்தமாக இருக்கமுடியும்? அப்படி பிரஸித்தமாயிருந்தும் கூட விஷய விசாரம் செய்யாத மூடர்களால் அதை ஸாக்ஷாத்கரிக்கமுடியவில்லை. (84)

अहमिदमिति च मतिभ्यां सततं व्यवहरति सर्वलोकोऽपि ।
प्रथमा प्रतीचि चरमा निवसति वपुरिन्द्रियादिबाह्यार्थे ॥

அஹமிதமிதி ச மதிப்யாம் ஸததம் வ்யவஹரதி
ஸர்வலோகோऽபி ।
ப்ரதமா ப்ரதீசி சரமா நிவஸதி வபுரிந்த்ரியாதி
பாஹ்யார்த்தே ॥

**अहं इदमिति**–'நான்' 'இது' என்ற, **मतिभ्यां च**–எண்ணங்களினுல்தான், **सर्वलोकोपि**-ஜனங்கள் எல்லாம், **सततं**-எப்பொழுதும், **व्यवहरति**-வியவஹாரம் செய்கிறது. (இதில்) **प्रथमा**–முதலாவது (நான் என்பது), **प्रतीचि**-உள்ளே உள்ள ஆத்மாவிலும், **चरमा**-பிந்தியது (இது என்பது), **वपुरिन्द्रियादिबाह्यार्थे**–சரீரம், இந்திரியம் முதலான வெளி விஷயத்திலும், **निवसति**–தங்கியிருக்கிறது.

"நான்", "இது" என்கிற இரண்டு எண்ணங்களினுல்தான் எல்லா ஜனங்களும் இடைவிடாமல் வியவகாரம் செய்கிருர்கள். முதலாவது (நான் என்பது) உள்ளுள்ள ஆத்மாவில் இருக்கிறது. பிந்தினது (இது என்பது)

**தேஹம்** இந்திரியங்கள் முதலான வெளியிலுள்ள விஷயங்களில் இருக்கிறது.

[ப்ரஹ்மம் நம்மைக் காட்டிலும் வேருக வெகுதூரத்தில் நம்மால் அறியக்கூடாமல் இருப்பதாக எண்ணவேண்டாம். ஒவ்வொருவனும் எப்பொழுதும் ப்ரஹ்மத்தை நேரில் பார்த்துக்கொண்டுதான் இருக்கிருன் ஒவ்வொருவனும் 'நான்' என்று சொல்லிக்கொள்கிருன். 'நான்' என்ற சொல்லுக்குப் பொருளாக விளங்குவது ப்ரஹ்மம்தான். நான் என்பதை அறியாதவன் யாராவது உண்டா? ஆனல் நான் என்பதுடன் மனுஷ்யன் முதலானவற்றைச் சேர்ப்பதால் ப்ரஹ்மத்தின் உண்மைஸ்வரூபம் விளங்காமல் போய்விடுகிறது. கயிற்றை நேரில் பார்க்கிறவன்தான் அதைப் பாம்பாகக் காண்கிருன். "நான் மனுஷ்யன்" என்பதை நன்கு விசாரித்து விவேசனம் செய்து சரீராதிகளிலிருந்து பிரித்துப் பார்த்தால் அஹமர்த்தம் ப்ரஹ்மமாகவே தெரியும்.] (85)

**वपुरिन्द्रियादिविषये याऽहंबुद्धिर्महत्यसौ भ्रान्तिः ।**
**तद्बुद्धिरतस्मिन्नित्यध्यासत्वेन शास्यमानत्वात् ॥ ८६ ॥**

*வபுரிந்த்ரியாதிவிஷயே யாऽஹம்புத்திர் மஹத்யஸௌ ப்ராந்தி: ।*
*தத்புத்திரதஸ்மின்னித்யத்யாஸத்வேன ஶாஸ்யமானத்வாத் ॥*

**अतस्मिन्**-அதல்லாததில், **तद्बुद्धिः**-அதுவென்ற ஞானம் **इति**-என்பதை, **अध्यासत्वेन**-அத்யாஸமாக, **शास्यमानत्वात्**-சாஸ்திரத்தில் உபதேசிக்கப்பட்டிருக்கிறபடியால், **वपुरिन्द्रियादिविषये**-சரீரம், இந்திரியம் முதலான விஷயத்தில், **या**-எந்த, **अहंबुद्धिः**-'நான்' என்ற எண்ணமோ, **असौ**-அது, **महती भ्रान्तिः**-பெரிய ப்ரமம்.

அதல்லாததை அதுவென்று நினைப்பது அத்யாஸம் என்று சொல்லப்பட்டிருக்கிறபடியால் (நான் அல்லாத)

தேஹம் இந்திரியங்கள் முதலான விஷயங்களில் நான் எனும் புத்தியானது பெரும் பிராந்தியேயாகும். (86)

तस्मादशेषसाक्षी परमात्मैवाहमर्थ इत्युचितम् ।
अजडवदेव जडोऽयं सत्संबन्धाद्भवत्यहंकारः ॥ ८७ ॥

தஸ்மாதசேஷ ஸாக்ஷீ பரமாத்மைவாஹமர்த்த இத்யுசிதம் ।
அஜடவதேவ ஜடோऽயம் ஸத்ஸம்பந்தாத்
பவத்யஹங்கார: ॥

तस्मात् -ஆகையால், अशेषसाक्षी-எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாக (நேரில் அறிகிறவராக) இருக்கும், परमात्मैव-பரமாத்மாதான், अहमर्थः-'நான்' என்பதன் பொருள், इति-என்பதுதான், उचितम् -யுக்தமானது. जडः-ஜடமாயிருக்கும், अयं-இந்த, अहङ्कारः-அஹங்காரம், सत्सम्बन्धात् -ஸத்தான ஆத்மாவின் ஸம்பந்தத்தால், अजडवदेव-ஜடமில்லாதது (சேதனம்)போல், भवति-ஆகிறது.

ஆகையால் யாவற்றிற்கும் ஸாக்ஷியாக இருக்கும் பரமாத்மாதான் "நான்" என்பதின் அர்த்தம் என்று சொல்வதுதான் நியாயம். ஜடமாயிருக்கிற அஹங்காரம் என்பது ஸத்தான ஆத்மாவின் ஸம்பந்தத்தினால் ஜடமில்லை போல் காண்கிறது. (87)

तस्मात् सर्वशरीरेष्वहमहमित्येव भासते स्पष्टः ।
यः प्रत्ययो विशुद्धस्तस्य ब्रह्मैव भवति मुख्योऽर्थः ॥ ८८ ॥

தஸ்மாத் ஸர்வசரீரேஷ்வஹமஹமித்யேவ பாஸதே
ஸ்பஷ்ட: ।
ய: ப்ரத்யயோ விசுத்தஸ்தஸ்ய ப்ரஹ்மைவ பவதி
முக்யோऽர்த்த: ॥

तस्मात् -ஆகையால், सर्वशरीरेषु-எல்லா சரீரங்களிலும், अहमहमित्येव-நான் நான் என்பதாகவே, स्पष्टः-தெளிவாகவும் विशुद्धः-பரிசுத்தமாகவும், यः प्रत्ययः-எந்த பிரத்யயமானது,

**भासते**-விளங்குகிறதோ, **तस्य**-அதற்கு, **ब्रह्मैव**-ப்ரஹ்மம்தான் **मुख्यः अर्थः**-முக்யமான அர்த்தமாக, **भवति**-ஆகிறது.

ஆகையால் எல்லா சரீரங்களிலுமே நான் நான் என்றே சுத்தமாய் (வேறொன்றுடனும் கலப்பில்லாமல்) ஸ்பஷ்டமாக எந்த பிரத்யயமானது (பாவமானது) பிரகாசிக்கிறதோ அந்த நான் என்பதற்கு முக்கியமான அர்த்தம் பிரஹ்மமேயாகும். (88)

गोशब्दार्थो गोत्वं तदपि व्यक्तिः प्रतीयतेऽर्थतया ।
अहमर्थः परमात्मा तद्वद्भ्रान्त्या भवत्यहंकारः ॥ ८९ ॥

கோஶப்தார்த்தோ கோத்வம் ததபி வ்யக்தி:
ப்ரதீயதேऽர்த்ததயா ।
அஹமர்த்த: பரமாத்மா தத்வத் ப்ராந்த்யா
பவத்யஹங்கார: ॥

**गोशब्दार्थः**-கோசப்தத்தின் பொருள், **गोत्वं**-(எல்லா மாடுகளிலும் உள்ள) கோத்வம் என்ற ஜாதிதான். **तदपि**-ஆனாலும், **व्यक्तिः**-தனிப்பட்ட மாடும், **अर्थतया**-பொருளாக, **प्रतीयते**-தோன்றுகிறது, **तद्वत्**-அதுபோலவே, **अहमर्थः**-'நான்' என்ற சொல்லின் பொருள், **परमात्मा**-(உண்மையில்) பரமாத்மாதான். **भ्रान्त्या**-பிரமத்தால், **अहंकारः**-அஹங்காரமும், **भवति**-(பொருளாக) ஆகிறது.

மாடு என்கிற சப்தத்தின் அர்த்தம் மாட்டு ஜாதியேயாகும். அப்படியிருந்தும் தனித்தனி மாடும் அதன் அர்த்தமாகத் தோன்றுகிறது. அப்படியே நான் என்பதற்கு பரமாத்மா என்றுதான் அர்த்தம். பிராந்தியினுல் அஹங்காரமும் அர்த்தமாகிவிடுகிறது. (89)

दग्धृत्वादिकमयसः पावकसङ्गेन भासते यद्वत् ।
तद्वच्चेतनसङ्गादहमि प्रतिभान्ति कर्तृतादीनि ॥ ९० ॥

தக்த்ருத்வாதிகமயஸ: பாவகஸங்கேன பாஸதே யத்வத் ।
தத்வத் சேதனஸங்காதஹமி ப்ரதிபாந்தி கர்த்ருதாதீனி ॥

**यद्वत्**-எவ்வாறு, **अयसः**-இரும்புக்கு, **पावकसङ्गेन**-நெருப்பின் சேர்க்கையால், **दग्धृत्वादिकं**-எரிக்கும் தன்மை முதலானது, **भासते**-தோன்றுகிறதோ, **तद्वत्**-அதுபோலவே, **चेतनसङ्गात्**-சேதனமான ஆத்மாவின் சேர்க்கையால், **अहमि**-அஹங்காரத்தில், **कर्तृत्वादीनि**-செய்கிற தன்மை முதலியவைகள், **प्रतिभान्ति**-தோன்றுகின்றன.

(எரிக்கும் தன்மை முதலானதில்லாத) இரும்புக்கு அக்னியின் சேர்க்கையினால் எப்படி எரிக்கும் தன்மை முதலானது இருப்பதுபோல் தோன்றுகிறதோ, அப்படியே கர்த்ருத்வம் முதலானவைகள் சைதன்யத்தின் சேர்க்கையினால் அஹங்காரத்தில் தோன்றுகின்றன.

[நெருப்பில் பழுக்கக் காய்ச்சிய இரும்பு சுட்டுவிட்டது என்று சொல்கிறான். இரும்புக்கு ஒருபொழுதும் சுடக்கூடிய தன்மை கிடையாது ஆனாலும் சுடக்கூடிய நெருப்பின் சேர்க்கையால் இரும்பையே சுடுவதாகச் சொல்கிறோம். இதுபோல் அந்தக்கரணம் ஜடமானதால் அதில் ஒன்றும் கிடையாது. ஆனாலும் சேதன ஸம்பந்தத்தால் கர்த்ருத்வம் முதலியவை தோன்றுகிறது] (90)

देहेन्द्रियादिदृश्यव्यतिरिक्तं विमलमतुलमद्वैतम् ।
अहमर्थ इति विदित्वा तद्व्यतिरिक्तं न कल्पयेत् किंचित् ॥

தேஹேந்த்ரியாதி த்ருச்ய வ்யதிரிக்தம்
விமலமதுலமத்வைதம் ।
அஹமர்த்த இதி விதித்வா தத்வ்யதிரிக்தம் ந கல்பயேத்
கிஞ்சித் ॥

**देहेन्द्रियादिदृश्यव्यतिरिक्तं**-சரீரம், இந்திரியம் முதலான அறியப்படும் வஸ்துக்களைக்காட்டிலும் வேறானதும், **विमलं**-மாசற்றதும், **अतुलं**-ஒப்பற்றதும், **अद्वैतं**-இரண்டற்றதுமான ஆத்மா, **अहमर्थः**-'நான்' என்பதன் பொருள், **इति**-என்று, **विदित्वा**-அறிந்து, **तद्व्यतिरिक्तं**-அதைக்காட்டிலும் வேறாக, **किंचित्**-ஒன்றையும், **न कल्पयेत्**-கல்பிக்கக்கூடாது.

தேஹம் இந்திரியம் முதலான அனுபவிக்கப்படும் விஷயங்களுக்கு வேறுபட்டதாய், அழுக்கற்றதாய், நிகரற்றதாய், இரண்டற்றதாய் உள்ளதுதான் "நான்" என்பதின் அர்த்தம் என்று தெரிந்துகொண்டபிறகு அதற்கும் வேருக எதையும் கல்பிக்கக்கூடாது. (91)

यद्वत् सुखदुःखानामवयवभेदादनेकता देहे ।
तद्वदिहासति भेदेऽप्यनुभववैविध्यमात्मनामेषाम् ॥ ९२ ॥

யத்வத் ஸுக துக்கானுமவயவபேதாதநேகதா தேஹே ।
தத்வதிஹாஸதி பேதேப்யனுபவ வைவித்ய
மாத்மநாமேஷாம் ॥

यद्वत्–எவ்வாறு, देहे–ஒரே சரீரத்தில், अवयवभेदात्-கை, கால் முதலான அவயவங்களின் பேதத்தால், सुखदुःखानां अनेकता–ஸுகத்தினுடையவும் துக்கத்தினுடையவும் அனுபவம் பலவாகத்தெரிகிறதோ, तद्वत्-அவ்வாறு, इह–இங்கு, एषां–இந்த, आत्मनां–ஆத்மாக்களுக்கு, भेदे असत्यपि–வேற்றுமை இல்லாவிட்டாலும், अनुभववैविध्यं–பலவாருன அநுபவம் ஏற்படுகிறது.

ஒரே தேஹமாயிருந்தபோதிலும் அவயவங்களுடைய வேறுபாட்டை வைத்து (தலைவலி, வயிற்றுவலி, கண்வலி என்று) துக்கமும் ஸுகமும் பலவாகத் தோன்றுகிறதோ அப்படியேதான் பரமாத்மாவிடத்தில் வேறுபாடு இல்லாமல் போனாலும் அநேகம் ஆத்மாக்கள் இருப்பதாக (உபாதிகளின் பேதத்தினுல்) தோன்றும்போது (ஸுகதுக்காதி) அனுபவங்களும் பலவிதமாகத் தோன்றுகின்றன. (92)

किमिदं किमस्य रूपं कथमिदमासीदमुष्य को हेतुः ।
इति न कदाऽपि विचिन्त्यं चिन्त्यं मायेति धीमता विश्वम् ॥

கிமிதம் கிமஸ்ய ரூபம் கதமிதமாஸீதமுஷ்ய கோ ஹேது:
இதி ந கதாZபி விசிந்த்யம் சிந்த்யம் மாயேதி தீமதா
விச்வம் ॥

**इदं**-இந்த பிரபஞ்சம், **किं**-என்ன? **अस्य**-இதனுடைய, **रूपं**-ஸ்வரூபம், **किं**-என்ன? **इदं**-இது, **कथं**-எப்படி, **आसीत्**-ஏற்பட்டது? **अमुष्य**-இதற்கு, **हेतुः**-காரணம், **कः**-எது? **इति**-என்று, **कदापि**-ஒருக்காலும், **न विचिन्त्यं**-ஆலோசிக்க வேண்டாம். **धीमता**-புத்திமானால், **विश्वं**-பிரபஞ்சம், **माया**-மாயிகம், **इति**-என்று, **चिन्त्यं**-எண்ணத்தக்கது.

இது என்ன, இதன் ஸ்வரூபம் என்ன, இது எப்படி ஏற்பட்டது, இதற்குக் காரணம் என்ன, என்று ஒரு பொழுதும் சிந்திக்கவேண்டியதில்லை. புத்திசாலியான வன் இந்த பிரபஞ்சம் மாயையே என்று நினைக்கவேண்டும்.

दन्तिनि दारुविकारे दारु तिरोभवति सोऽपि तत्रैव ।
जगति तथा परमात्मा परमात्मन्यपि जगत् तिरोधत्ते ॥

தந்தினி தாருவிகாரே தாரு திரோபவதி ஸோऽபிதத்ரைவ ।
ஜகதி ததா பரமாத்மா பரமாத்மந்யபி ஜகத் திரோதத்தே ॥

**दारुविकारे**-மரத்தின் கார்யமான, **दन्तिनि**-யானையில், **दारु**-மரம், **तिरोभवति**-மறைந்து விடுகிறது. **सोऽपि**-அந்த யானையும், **तत्रैव**-அந்த மரத்திலேயே (மறைந்துவிடுகிறது). **तथा**-அவ்விதமே, **जगति**-பிரபஞ்சத்தில், **परमात्मा**-பரமாத்மாவும், **परमात्मनि**-பரமாத்மாவில், **जगदपि**-பிரபஞ்சமும், **तिरोधत्ते**-மறைந்துவிடுகிறது.

மரத்தினால் செய்யப்பட்டிருக்கும் யானையில் (தத்வம் தெரியாதவனுக்கு) மரம் மறையும். அப்படியே யானை (தத்வம் தெரிந்தவனுக்கு) மரத்திலேயே மறைந்துவிடும். அப்படியே (தத்வம் தெரியாதவனுக்கு) ஜகத்தில் பரமாத்மா மறைந்துவிடும், (தத்வம் அறிந்தவனுக்கு) பரமாத்மாவினிடத்திலேயே ஜகத் மறைந்துவிடும்.

[மரத்தால் பெரிய யானை செய்து அதற்கு வர்ண மெல்லாம் தீட்டி நிறுத்திவைத்திருந்தால் சிறு பையன் அதைக்கண்டு பயந்து ஓடுகிறான். அவனுக்கு மரம் தெரிவ

தில்லை. யானைதான் தெரிகிறது. யானையில் மரம் மறைந்துவிடுகிறது அந்தப் பையனின் அருகில் இருக்கும் அவன் தந்தையோ அதைத் தொட்டுப்பார்த்து "மரத்தில் எவ்வளவு அழகாக வேலை செய்திருக்கிறான்" என்று அதிசயிக்கிறான். இவருக்கு மரத்தில் யானை மறைந்து விட்டது இதைத்தான் "மரத்தை மறைத்தது மாமத யானை, மரத்தில் மறைந்தது மாமதயானை" என்று பெரியோர்கள் சொல்வார்கள். இதுபோலவே ப்ரஹ்மத்தையே பார்க்கும் ஞானிக்கு ப்ரஹ்மத்தில் பிரபஞ்சம் மறைந்துவிடுகிறது. அக்ஞானிக்கு பிரஹ்மம் மறைந்து பிரபஞ்சம் காண்கிறது] (94)

आत्ममये महति पटे विविधजगच्चित्रमात्मना लिखितम् ।
स्वयमेव केवलमसौ पश्यन् प्रमुदं प्रयाति परमात्मा ॥ ९५ ॥

ஆத்மமயே மஹதி படே விவிதஜகச்சித்ரமாத்மநா லிகிதம் ।
ஸ்வயமேவ கேவலமஸௌ பச்யன் ப்ரமுதம் ப்ரயாதி
பரமாத்மா ॥

**असौ परमात्मा**—அந்த பரமாத்மாவானவர், **आत्ममये**-தன் ஸ்வரூபமான, **महति**-பெரிய **पटे**—துணியில் (திரையில்), **आत्मना**—தன்னால், **लिखितं**—எழுதப்பட்ட, **विविधजगच्चित्रं**-பல விதமான பிரபஞ்சமாகியபடத்தை, **स्वयमेव केवलं**-தான் ஒருவனாகவே, **पश्यन्**-பார்த்துக்கொண்டு, **प्रमुदं**-மிகுந்த ஸந்தோஷத்தை, **प्रयाति**- அடைகிறார்.

பரமாத்மாவானவர் தானாகவே யிருக்கிற பெரிய பட வஸ்திரத்தில் பலவித பிரபஞ்சமாகிற சித்திரத்தை தானே எழுதி அதைத்தானே தனித்திருந்து பார்த்துக்கொண்டு ஸந்தோஷத்தை அடைகிறார். (95)

*[பார்க்கப்படும் பிரபஞ்சம், பார்க்கிறவர், பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தவர், பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானம் எல்லாமாகவும் பரமாத்மா ஒருவரே விளங்குகிறார்.] (95)*

चिन्मात्रममलमक्षयमद्वयमानन्दमनुभवारूढम् ।
ब्रह्मैवास्ति तदन्यन्न किमप्यस्तीति निश्चयो विदुषाम् ॥

சின்மாத்ர மமலமக்ஷயமத்வய மாநந்த மனுபவாரூடம் ।
ப்ரஹ்மைவாஸ்தி ததன்யன் ந கிமப்யஸ்தீதி நிச்சயோ
விதுஷாம் ॥

**चिन्मात्रं**-சைதன்யத்தையே ஸ்வரூபமாகக்கொண்டதும் **अमलं**-தோஷமற்றதும், **अक्षयं**-அழிவற்றதும், **अद्वयं**-இரண்டற்றதும், **आनन्दं**-ஆனந்தரூபமாயும், **अनुभवारूढं**-அனுபவம் ஒன்றினுலே அறியக்கூடியதுமான, **ब्रह्मैव**-ப்ரஹ்மம் ஒன்று தான், **अस्ति**-இருக்கிறது. **तदन्यत्**-அதைக்காட்டிலும் வேருக **किमपि**-ஒன்றும், **नास्ति**-இல்லை, **इति**-என்பது, **विदुषां**-வித்வான்களுடைய, **निश्चयः**-தீர்மானம்.

சைதன்யமாத்திரமாய், தோஷமற்றதாய், அழிவற்றதாய், இரண்டற்றதாய், ஆனந்தரூபமாய், அனுபவத்தினுல் தெரியக்கூடியதாய், இருக்கும் பிரஹ்மம்தான் (வாஸ்தவத்தில்) இருக்கிறது. அதைத் தவிர வேருக எதுவும் கிடையாது என்பதே அறிந்தவர்களுடைய தீர்மானம். (96)

व्यवहारस्य दशेयं विद्याऽविद्येति भेदपरिभाषा ।
नास्त्येव तत्त्वदृष्ट्या तत्त्वं ब्रह्मैव नान्यदस्त्यस्मात् ॥ ९७ ॥

வ்யவஹாரஸ்ய தசேயம் வித்யாऽவித்யேதி பேதபரிபாஷா ।
நாஸ்த்யேவ தத்வத்ருஷ்ட்யா தத்வம் ப்ரஹ்மைவ
நாந்யதஸ்த்யஸ்மாத் ॥

**विद्या**-ஞானம், **अविद्या**-அக்ஞானம், **इति**-என்ற, **इयं**-இந்த, **भेदपरिभाषा**-வேற்றுமைப்பேச்சு, **व्यवहारस्य**-வியவஹாரத்தின், **दशा**-தசைதான். **तत्त्वदृष्ट्या**-உண்மைப்பார்வையில், **नास्त्येव**-இது ஒன்றும் இல்லை. **तत्त्वं**-உண்மைப்பொருள் **ब्रह्मैव**-ப்ரஹ்மம்தான். **अस्मात्**-இந்த ப்ரஹ்மத்தைக் காட்டிலும், **अन्यत्**-வேறு வஸ்து, **नास्ति**-இல்லை.

ஞானம் அக்ஞானம் என்று வேற்றுமையுடன் பேசுவது வியவஹார தசையில்தான். தத்வ திருஷ்டியுடன் பார்த்தால் இதுவும் கிடையாது. தத்வம் பிரஹ்மமேதான். அதைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது. (97)

अस्त्यन्यदिति मतं चेत् तदपि ब्रह्मैतदस्तितारूपम् ।
व्यतिरिक्तमस्तितायाः नास्तितया शून्यमेव तत् सिद्धम् ॥

அஸ்த்யந்யதிதி மதம் சேத் ததபி
ப்ரஹ்மைததஸ்திதாரூபம் ।
வ்யதிரிக்தமஸ்திதாயா நாஸ்திதயா ஶூந்யமேவ தத்
ஸித்தம் ॥

अन्यत्-(பிரஹ்மத்தைக்காட்டிலும்) வேறு வஸ்து, अस्ति इति-இருக்கிறது என்று, मतं चेत्-அபிப்ராயமானால், तदपि-அதுவும், एतत्-இந்த, अस्तितारूपं-இருப்புத்தன்மை ஸ்வரூபமான, ब्रह्म-ப்ரஹ்மம்தான். अस्तितायाः-இருக்கும் தன்மையைக்காட்டிலும், व्यतिरिक्तं-வேருக இருக்குமானால், तत्-அது, नास्तितया-இல்லாத் தன்மையினால், शून्यमेव-சூன்யமாகவே, सिद्धम्-ஆகும்.

(பிரஹ்மத்தை தவிர) வேறு ஒன்று இருக்கிறது என்று அபிப்ராயப்பட்டால் அதுவும் பிரஹ்மமேதாகும். ஏனென்றால் பிரஹ்மம்தான் இருக்கும் தன்மையை ஸ்வரூபமாக உடையது. இருக்கும் தன்மைக்கு வேறு என்றால் இல்லாத்தன்மை, அதாவது சூன்யம் தான் என்று ஏற்படும்.

तत्त्वावबोधशक्त्या सुस्थितया बाधिताऽपि सा माया ।
आदेहपातमेषामाभात्यात्मानमपि निजं विदुषाम् ॥ ९९ ॥

தத்வாவபோதஶக்த்யா ஸுஸ்திதயா பாதிதாऽபி ஸா மாயா।
ஆதேஹபாதமேஷாமாபாத்யாத்மாநமபி நிஜம் விதுஷாம் ॥

सुस्थितया-நன்கு நிலைபெற்ற, तत्त्वावबोधशक्त्या-தத்வ ஞானத்தின் சக்தியால், बाधिताऽपि-பாதிக்கப்பட்டபோதி

லும், सा माया-அந்த மாயையானது, निजं आत्मानं-தனது ஆத்மஸ்வரூபத்தை, विदुषामपि- அறிந்தவர்களாயிருந்த போதிலும் एषां-இவர்களுக்கு, आदेहपातं-சரீரம் விழும்வரை, आभाति-தோன்றிக்கொண்டிருக்கும்.

நன்கு ஸ்திரப்பட்ட தத்வஞானத்தின் சக்தியினுல் பாதிக்கப்பட்டபோதிலும் அந்த மாயை தன்னுடைய ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்தவர்களுக்கும் இவர்களின் சரீரம் கீழே விழும் வரை தோன்றிக்கொண்டேயிருக்கும். (99)

एष विशेषो विदुषां पश्यन्तोऽपि प्रपञ्चसंसारम् ।
पृथगात्मनो न किंचित् पश्येयुः सकलनिगमनिर्णीतात् ॥

ஏஷ விஶேஷோ விதுஷாம் பஶ்யந்தோऽபி
ப்ரபஞ்ச ஸம்ஸாரம் ।
ப்ருதகாத்மனோ ந கிஞ்சித் பச்யேயு:
ஸகல நிகம நிர்ணீதாத் ॥

प्रपञ्चसंसारं-பிரபஞ்ச வஸ்துவை, पश्यन्तोऽपि-பார்த்துக் கொண்டிருந்தபோதிலும், सकलनिगमनिर्णीतात्-எல்லா வேதங்களாலும் தீர்மானிக்கப்பட்ட, आत्मनः-ஆத்மஸ்வரூபத்தைக்காட்டிலும், पृथक्-வேருக, किंचित्-ஒன்றையும், न पश्येयुः-பார்க்கமாட்டார்கள். एषः-இது, विदुषां-ஞானிகளுடைய, विशेषः-சிறப்பான அம்சம்.

ஆனுல் ஆத்ம ஞானிகளின் விசேஷமென்னவென்ருல் அவர்கள் பிரபஞ்ச ஸம்ஸாரத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறபோதே எல்லா வேதங்களிலும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிற ஆத்மாவைத் தவிர வேருக எதையும் பாாக்க மாட்டார்கள்.

[அத்வைதமான ஆத்மஞானம் ஏற்பட்டாலும் கூட பிராரப்த சரீரம் உள்ளவரை இந்த பிரபஞ்சம் அவர்களுக்கும் தோன்றிக்கொண்டுதான் இருக்கும். இவர்களே ஜீவன் முக்தர்கள் ஆனுலும் அக்ஞானிகள் ப்ரஹ்மத்தை அறியாத

தால் பிரபஞ்சத்தை உண்மை என்ற நினைப்புடன் பார்ப்பார்கள். ஞானிகளோ உண்மையான ப்ரஹ்மத்தை அறிந்துவிட்டதால் தாங்கள் பார்க்கும் பிரபஞ்சம் பொய் என்ற நினைவு எப்பொழுதும் கூடவே இருக்கும் இதுதான் ஞானிகளின் சிறப்பு ] (100)

किं चिन्त्यं किमचिन्त्यं किं कथनीयं किमप्यकथनीयम् ।
किं कृत्यं किमकृत्यं निखिलं ब्रह्मेति जानतां विदुषाम् ॥

கிம் சிந்த்யம் கிமசிந்த்யம் கிம் கதனீயம் கிமப்யகதநீயம் ।
கிம் க்ருத்யம் கிமக்ருத்யம் நிகிலம் ப்ரஹ்மேதி ஜாநதாம்
விதுஷாம் ॥

निखिलं-எல்லாம், ब्रह्म-ப்ரஹ்மம், इति-என்று, जानतां-அறிந்துகொண்ட, विदुषां-ஞானிகளுக்கு, चिन्त्यं-ஆலோசிக்கக்கூடியது, किम्-எது? अचिन्त्यम्-ஆலோசிக்கக்கூடாதது किम्-எது? कथनीयं-சொல்லக்கூடியது, किम्-எது? अकथनीयमपि-சொல்லக்கூடாததும், किम्-எது? कृत्यं-செய்யத்தக்கது, किम्-எது? अकृत्यम्-செய்பத்தகாதது, किम्-எது?

எல்லாமே பிரஹ்மம் என்று அறிந்த ஞானிகளுக்கு சிந்திக்கக்கூடியது எது? சிந்திக்கக்கூடாதது எது? சொல்லக்கூடியது எது? எதுதான் சொல்லக்கூடாதது? செய்யக்கூடியது எது? செய்யக்கூடாதது எது? (101)

निखिलं दृश्यविशेषं दृग्रूपत्वेन पश्यतां विदुषाम् ।
बन्धो नापि न मुक्तिर्न परात्मत्वं न चापि जीवत्वम् ॥

நிகிலம் த்ருச்யவிசேஷம் த்ருக்ருபத்வேன பச்யதாம்
விதுஷாம் ।
பந்தோ நாபி ந முக்திர் ந பராத்மத்வம் ந சாபி ஜீவத்வம் ॥

निखिलं दृश्यविशेषं-அறியப்படும் விசேஷத்தை எல்லாம், दृग्रूपत्वेन-அறிவு ரூபமாக, पश्यतां-பார்க்கிற, विदुषां-ஞானிகளுக்கு, बन्धः-பந்தம், न-கிடையாது. मुक्तिरपि-முக்தியும்,

**न**-கிடையாது **परात्मत्वं**-பரமாத்மத்தன்மை, **न**-கிடையாது. **जीवत्वं चापि**-ஜீவத்தன்மையும், **न**-கிடையாது.

திருச்யமாய் (அனுபவிக்கப்படுவதாய்) உள்ள எல்லா விசேஷங்களையுமே த்ருக்ரூபமாய் (அனுபவிப்பவனின் ஸ்வரூபமாய்) பார்க்கும் ஞானிகளுக்கு ஸம்ஸார பந்தமும் கிடையாது. (பந்தமில்லாததினுல்) முக்தியும் கிடையாது. பரமாத்மா என்பதும் கிடையாது, ஜீவன் என்பதும் கிடையாது. (102)

(அ) ஆசார்யார் தன் உபதேசத்தை முடிக்கிருர்:—

असकृदनुचिन्तितानामव्याहततरनिजोपदेशानाम् ।
प्रामाण्यपरमसीम्नां निगमनमिदमेव निखिलनिगमानाम् ॥

அஸக்ருதனுசிந்திதாநாமவ்யாஹததர நிஜோபதேசாநாம் |
ப்ராமாண்ய பரம ஸீம்நாம் நிகமனமிதமேவ
நிகில நிகமாநாம் ||

**असकृत्**-அடிக்கடி, **अनुचिन्तितानां**-ஆலோசிக்கப்பட்டதும், **अव्याहततरनिजोपदेशानां**எப்பொழுதும் பிசகாமலே இருக்கும் தன் உபதேசங்களை யுடையதும், **प्रामाण्यपरमसीम्नां**-பிரமாணமாகும் விஷயத்தில் கடைசி எல்லையாக இருப்பதுமான, **निखिलनिगमानां**-எல்லா வேதங்களுடையவும், **निगमनं**-முடிவான தாத்பர்யம், **इदमेव**-இதுதான்.

எவையிலுள்ள உபதேசங்கள் ஒருபோதும் பிசகாதோ, பிராமாண்யத்திற்குக் கடைசி எல்லையாக எவை இருக்கின்றனவோ, அந்த ஸகல வேதங்களையும் அடிக்கடி சிந்தனம் செய்யும்போது வரும் முடிவு இதுதான்.

[உலகிலுள்ள எல்லா பிரமாணங்களிலும் மேலான பிரமாணம் உபநிஷத்துக்கள்தான். இதைவிடச் சிறந்த ப்ரமாணம் வேறு ஒன்றும் கிடையாது. இதில் கூறப்பட்ட உபதேசங்கள் உண்மையானவை. ஒருவிதத்திலும் ஒருக்காலும் ஒரு இடத்திலும் இதற்கு மாறுதலே கிடையாது.

இந்த உபநிஷத்துக்களைத் திருப்பித் திருப்பி நன்கு ஆராய்ந்து பார்த்தோமானால் பின்கண்ட முடிவுதான் கிடைக்கிறது. அதாவது ஆத்மா ஒன்றே உண்மைப் பொருள். இதைக் காட்டிலும் வேறாக ஒன்றும் கிடையாது. தோன்றும் பிரபஞ்சம் எல்லாம் பொய். ஜீவன், ப்ரஹ்மம், பந்தம், முக்தி, உபதேசம் இவ்விதமான பேதங்களும் அக்ஞான தசையில்தான். எல்லாவற்றையும் ப்ரஹ்மமாகப் பார்க்கிற ஞானிகளின் திருஷ்டியில் இந்த வேற்றுமைகளும் கிடையாது.] (103)

इति बोधितः स गुरुणा शिष्यो हृष्टः प्रणम्य तं पदयोः ।
स्वानुभवसिद्धमर्थं स्वयमेवान्तर्विचारयामास ॥ १०४ ॥

இதி போதித: ஸ குருணா ஶிஷ்யோ ஹ்ருஷ்ட: ப்ரணம்ய
தம் பதயோ: ।
ஸ்வானுபவஸித்தமர்த்தம் ஸ்வயமேவாந்தர் விசாரயாமாஸ॥

इति-இவ்வாறு, गुरुणा-ஆசார்யரால், बोधितः-அறியும்படி செய்யப்பட்ட, सः-அந்த, शिष्यः-சிஷ்யன், हृष्टः-ஆனந்தம் அடைந்தவனாக, तं-அந்த குருவை, पदयोः-சரணங்களில் प्रणम्य-வணங்கி, स्वानुभवसिद्धं-தன்னுடைய அனுபவத்தால் தீர்மானிக்கப்பட்ட, अर्थं-விஷயத்தை, स्वयमेव-தானாகவே, अन्तः-தன் மனதில், विचारयामास-விசாரித்துக்கொண்டான்.

இவ்விதமாக குருநாதரால் போதிக்கப்பட்ட அந்த சிஷ்யன் ஸந்தோஷத்தையடைந்து குருவை பாதங்களில் நமஸ்கரித்துவிட்டு தன்னுடைய அனுபவத்தினால் தீர்மானிக்கப்பட்ட விஷயத்தைத் தானாகவே தனக்குள் விசாரம் செய்துகொண்டான்.

[ஆசார்யர் ஆத்மஸாக்ஷாத்காரம் பெற்று ஸ்வானுபவமுள்ளவர். சிஷ்யனோ ஸாதனங்களை நன்கு அனுஷ்டித்து ஞானம் பெறுவதற்குத் தகுந்த நிலையிலுள்ள உத்தமாதிகாரி. அவனுடைய மனோநிலையை அறிந்து அதற்குத் தக்கபடி உபநிஷதர்த்தங்களை திருஷ்டாந்தத்துடன் விரி

வாக உபதேசித்ததும் அடுத்த க்ஷணத்திலேயே சிஷ்யனுக்கு தத்வஞானுனுபவம் ஏற்பட்டுவிட்டது. தன் அனுபவத்தை சிஷ்யன் பின்வரும் 40 சுலோகங்களில் கூறுகிருன். அகாரம் முதல் க்ஷகாரம் வரையுள்ள ஒவ்வொரு எழுத்தையும் வரிசையாக இந்த சுலோகங்களின் முதல் எழுத்தாக வைத்து பகவத்பாதாசார்யார் இந்த சுலோகங்களை அருளியிருக்கிருர்கள்.] *(104)*

ஸ்வானுபவ வர்ணமாலா :-

अजरोऽहमक्षरोऽहं प्राज्ञोऽहं प्रत्यगात्मबोधोऽहम् ।
परमानन्दमयोऽहं परमशिवोऽहं भवामि परिपूर्णः ॥ १०५ ॥

அஜரோऽஹமக்ஷரோऽஹம் ப்ராஜ்ஞோऽஹம்
ப்ரத்யகாத்மபோதோऽஹம் ।
பரமானந்தமயோऽஹம் பரமஶிவோऽஹம் பவாமி
பரிபூர்ணः ॥

अहं-நான், अजरः-மூப்பு அற்றவன். अहं-நான், अक्षरः-நாசம் அற்றவன். अहं-நான், प्राज्ञः-அறிவுள்ளவன். अहं-நான், प्रत्यगात्मबोधः-உள்ளிருக்கும் ஆத்மசைதன்யமாக இருப்பவன். अहं-நான், परमानन्दमयः-மேலான ஆநந்தஸ்வரூபமாயிருப்பவன். अहं-நான், परमशिवः-சிறந்த மங்களஸ்வரூபனுக, परिपूर्णः-எங்கும் நிறைந்தவனுக, भवामि-இருக்கிறேன்.

நான் ஜரையற்றவன், நான் குறைவு அற்றவன், நான் நல்ல அறிவுள்ளவன், நான் உள்ளிருக்கும் ஆத்மாவின் ஞானத்தையுடையவன், நான் பரமானந்தமயன், நான் உத்தமமான மங்களஸ்வரூபி, பரிபூர்ணமாகவும் இருக்கிறேன். (105)

आद्योऽहमात्मभाजामात्मानन्दानुभूतिरसिकोऽहम् ।
आबालगोपमखिलैरहमित्यनुभूयमानमहिमाऽहम् ॥ १०६ ॥

ஆத்யோZஹமாத்மபாஜாமாத்மாநந்தானுபூதி
ரஸிகோZஹம் ।
ஆபாலகோபமகிலைரஹமித்யனுபூயமானமஹிமாZஹம் ॥

आत्मभाजां-ஆத்மாவை அடைந்தவர்களுக்குள், अहं-நான் आद्यः-முதன்மையானவன். अहं-நான், आत्मानन्दानुभूतिरसिकः-ஆத்மாவின் ஆனந்தத்தை அனுபவிப்பதில் ப்ரீதி உள்ளவன். अहं-நான், आबालगोपं-சிறுவர்கள் இடையர்கள் முதல், अखिलैः-யாவராலும், अहमित्यनुभूयमानमहिमा-‘ நான் ’ என்று அனுபவிக்கப்படும் பெருமை உள்ளவன்.

ஆத்மாவை அடைந்தவர்களுக்குள் நான் முதலானவன். ஆத்மாவின் ஆனந்தத்தை அனுபவிப்பதில் ரஸிகனு யிருப்பவன் நான். பாலர்கள் இடையர்கள் முதற்கொண்டு எல்லா ஜனங்களாலேயும் நான் நான் என்று அனுபவிக்கப் படும் பெருமையுடையவன் நான். (106)

इहपरसुखविमुखोऽहं निजसुखबोधानुभूतिभरितोऽहम् ।
इतिमतिदूरतरोऽहं भावेतरसुखनिषक्तचित्तोऽहम् ॥ १०७ ॥

இஹ பர ஸுக விமுகோZஹம் நிஜ ஸுக போதானுபூதி பரி
தோZஹம் ।
இதிமதி தூரதரோZஹம் பாவேதர ஸுக நிஷக்த
சித்தோZஹம் ॥

अहं-நான், इहपरसुखविमुखः-இவ்வுலகிலும் மேலுலகிலும் உள்ள ஸுகங்களில் ஈடுபடாதவன். अहं-நான், निजसुखबोधानुभूतिभरितः- தனது ஆத்மஸுகம், ஞானம் இவ்விரண்டின் அனுபவம் நிறைந்தவன். अहं-நான், इतिमतिदूरतरः-‘ இவ்வாறு ’ என்ற எண்ணத்திற்கு வெகுதூரத்தில் இருப்பவன். अहं-நான், भावेतरसुखनिषक्तचित्तः-பிரபஞ்ச ஸுகத்தைக்காட்டிலும் வேறுபட்டதான ஆத்ம ஸுகத்தில் ஈடுபட்ட மனமுள்ளவன்,

இஹலோக ஸுகங்களையும் பரலோக ஸுகங்களையும் புறக்கணித்தவன் நான். தன்னுடைய ஸுகஸ்வரூபத்தையும், ஞானஸ்வரூபத்தையும், நன்கு அனுபவிக்கிறவன் நான். இவ்விதம் என்ற எண்ணத்திற்கு வெகுதூரத்திலிருப்பவன் நான். விஷயங்களிலிருந்து வேறுபட்டதான ஸுகத்தில் ஈடுபட்ட சித்தத்தோடு கூடினவன் நான். (107)

ईशोऽहमीश्वराणामीर्ष्याद्वेषानुषङ्गरहितोऽहम् ।
ईक्षणविषयमतीनामीप्सितपुरुषार्थसाधनपरोऽहम् ॥ १०८ ॥

ஈசோऽஹமீச்வராணாமீர்ஷ்யா த்வேஷானுஷங்க
ரஹிதோऽஹம் ।
ஈக்ஷண விஷய மதீனாமீப்ஸித புருஷார்த்த ஸாதன
பரோऽஹம் ॥

अहं–நான், ईश्वराणां ईशः–ஈசுவரர்களுக்கெல்லாம் மேல்பட்ட ஈசுவரன். अहं–நான், ईर्ष्याद्वेषानुषङ्गरहितः–பொறாமை, அஸூயை இவற்றின் சேர்க்கையற்றவன். अहं–நான், ईक्षणविषयमतीनां–பார்வைக்குத் தென்படும் விஷயங்களில் நோக்கமுள்ளவர்களுக்கு, ईप्सितपुरुषार्थसाधनपरः–விரும்பிய புருஷார்த்தங்களை அடையச்செய்வதில் ஈடுபட்டவன்.

ஆளுபவர்களுக்கெல்லாம் ஆளுபவன் நான். நான் பொறாமை த்வேஷம் இவைகளின் தொடர்பு அற்றவன். பார்வைக்கு விஷயமான பதார்த்தங்களில் நோக்கமுள்ளவர்களுக்கு அவரவர்கள் அடைய விரும்பும் புருஷார்த்தத்தை ஸாதித்துக்கொடுப்பவன் நான். (108)

उदयोऽहमेव जगतामुपनिषदुद्यानकृतविहारोऽहम् ।
उद्वेलशोकसागरबाडवमुखहव्यवाहनार्चिरहम् ॥ १०९ ॥

உதயோऽஹமேவ ஜகதாமுபநிஷதுத்யான
க்ருதவிஹாரோऽஹம் ।
உத்வேல ஶோக ஸாகர பாடபமுக
ஹவ்யவாஹனார்ச்சிரஹம் ॥

**अहमेव**-நான் தான், **जगतां**-உலகங்களுக்கு, **उदयः**-(உண்டாவதற்கு) காரணம், **अहं**-நான், **उपनिषदुद्यानकृतविहारः**-உபநிஷத்துக்கள் என்னும் உத்யானத்தில் (பூந் தோட்டத்தில்) விளையாட்டை நடத்துபவன். **अहं**-நான், **उद्वेल**-கரை மீறி வருகின்ற, **शोकसागर**-துன்பமென்னும் கடலுக்கு, **बाडवमुख**-படபாமுகம் என்ற, **हव्यवाहनार्चिः**-அக்னியின் ஜ்வாலையாக இருப்பவன்.

நான்தான் உலகங்களுக்கெல்லாம் காரணம். உபநிஷத் ஆகிற உத்யான வனத்தில் விளையாடிக்கொண்டிருப்பவன் நான். கரைபுரண்ட சோகமாகிற கடலை (வற்றடிக்கக் கூடிய) பாடவாக்னியின் ஜ்வாலை நான். *(109)*

ऊर्जस्वलनिजविभवैरूर्ध्वमधस्तिर्यगश्नुवानोऽहम् ।
उहापोहविचारैरुररीकृतवत्प्रतीयमानोऽहम् ॥ ११० ॥

ஊர்ஜஸ்வல நிஜவிபவை ரூர்த்வமதஸ்திர்யகச்னு
வானோऽஹம் ।
ஊஹாபோஹ விசாரைருரரீக்ருதவத் ப்ரதீயமானோऽஹம் ॥

**अहं**-நான், **ऊर्जस्वलनिजविभवैः**-மிகச்சிறந்த என் மஹிமைகளால், **ऊर्ध्वं**-மேலும், **अधः**-கீழேயும், **तिर्यक्**-குறுக்கிலும், **अश्नुवानः**-பரவியிருப்பவன். **अहं**-நான், **ऊहापोहविचारैः**-ஊஹம் (ஊஹிப்பது) அபோஹம் (தள்ளுவது) இந்த விசாரங்களால், **उररीकृतवत्**-அங்கீகரிக்கப்பட்டவன்போல், **प्रतीयमानः**-தோன்றுகிறவன்.

என்னுடைய உத்தமமான விபவங்களால் மேலும் கீழும் குறுக்கேயும் வியாபித்திருக்கிறவன் நான். ஊஹாபோஹ விசாரங்களுக்கு விஷயம்போல் தோன்றுபவனும் நான். *(110)*

ऋषिरहमृष्यगणोऽहं दृष्टिरहं दृश्यमानमहमेव ।
ऋद्धिरहं वृद्धिरहं तृप्तिरहं तृप्तिदीपदीप्तिरहम् ॥ १११ ॥

ருஷிரஹம் ருஷ்யகணோऽஹம் த்ருஷ்டிரஹம்
த்ருச்யமானமஹமேவ ।
ருத்திரஹம் வ்ருத்திரஹம் த்ருப்திரஹம் த்ருப்திதீப
தீப்திரஹம் ॥

अहं-நான், ऋषिः-(மந்திரங்களை) அறிகிறவன். ऋष्य-गणः-அறியத்தக்க மந்த்ர ஸமூஹம், अहं-நான். दृष्टिः-பார்வை अहं-நான். दृश्यमानं-பார்க்கப்படும் வஸ்துவும், अहमेव-நானே. ऋद्धिः-செழிப்பு, अहं-நான். वृद्धिः-வளர்ச்சி, अहं-நான். तृप्तिः-த்ருப்தி अहं-நான். तृप्तिदीपदीप्तिः-த்ருப்தியை விளக்கும் தீபத்தின் வெளிச்சம் अहम्-நான்.

நன்கு அறிந்தவன் நான், அறியப்படும் விஷய ஸமூகம் நான். பார்வையும் நான், பார்க்கப்படுவதும் நானே. செழிப்பு நான், விருத்தி நான், திருப்தி நான், திருப்தியாகிற தீபத்தின் பிரகாசம் நான். (111)

एकोऽहमेतदीदृशमेवमिति स्फुरितभेदरहितोऽहम् ।
एष्टव्योऽहमनीहैरन्तः सुकृतानुभूतिभूतोऽहम् ॥ ११२ ॥

ஏகோऽஹமேததீத்ருசமேவமிதி ஸ்ப்புரித பேத
ரஹிதோऽஹம் ।
ஏஷ்டவ்யோऽஹமனீஹைரந்த: ஸுக்ருதானுபூதி
பூதோऽஹம் ॥

अहं-நான், एकः-ஒருவன், अहं-நான், एतत्-இது, ईदृशं-இம்மாதிரி, एवं-இவ்விதம், इति-என்று, स्फुरितभेदरहितः-தோன்றும் வேற்றுமைகளற்றவன். अनीहैः-ஆசையற்றவர்களாலும், एष्टव्यः-விரும்பப்படுபவன், अहं-நான். अन्तः-உள்ளுக்குள், सुकृतानुभूतिभूतः-புண்ய பரிபாகத்தால் உண்டான அனுபவமாக இருப்பவன், अहं-நான்.

நான் தனித்து ஒருவன் "இது", "இதுமாதிரி", "இவ்விதம்" என்று தோன்றும் வேற்றுமையற்றவன் நான். ஆசையற்றவர்களால் தனக்குள்ளே தேட விரும்பத்

தகுந்தவன் நான். புண்யங்களின் அனுபவமாயிருப்பவன் நான். (112)

ऐक्यावभासकोऽहं वाक्यपरिज्ञानपावनमतीनाम् ।
ऐशमहमेव तत्त्वं नैशतमःप्रायमोहमिहिरोऽहम् ॥ ११३ ॥

ஐக்யாவபாஸகோऽஹம் வாக்ய பரிஞான பாவன மதீநாம் ।
ஐசமஹமேவ தத்வம் நைச தம:ப்ராய மோஹ
மிஹிரோऽஹம் ॥

**वाक्यपरिज्ञानपावनमतीनां**-மஹாவாக்யத்தின் பொருளை நன்கு அறிந்ததனால் தூய்மையான புத்தி உள்ளவர்களுக்கு **अहं**-நான், **ऐक्यावभासकः**-ஜீவப்ரஹ்மைக்யத்தை விளங்கும் படி செய்கிறவன். **ऐशं**-ஈசுவரனுடையதான, **तत्त्वं**-உண்மை ஸ்வரூபம், **अहमेव**-நானே. **नैशतमःप्रायमोहमिहिरः**-இரவிலுள்ள இருள்போன்ற மோஹத்திற்கு (அதையழிக்கும்) ஸூர்யன், **अहं**-நான்.

(தத் த்வம் அஸி முதலான) வாக்யங்களை நன்கு அறிந்ததினால் சுத்தமான புத்தியுள்ளவர்களுக்கு (ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் உள்ள) ஐக்யத்தை தெளிவு படுத்துகிறவர் நான். ஈசுவரனுடைய தத்வ ஸ்வரூபமும் நானே. இரவிலுள்ள இருட்டுப்போலுள்ள மோஹத்தைப் (போக்கடிக்கும்) ஸூர்யன் நான். (113)

ओजोऽहमोषधीनामोतप्रोतायमानभुवनोऽहम् ।
ओंकारसारसोल्लसदात्मसुखामोदमत्तभृङ्गोऽहम् ॥ ११४ ॥

ஓஜோऽஹமோஷதீநாமோதப்ரோதாயமான புவனோऽஹம் ।
ஓங்கார ஸாரஸோல்லஸதாத்ம ஸுகாமோத மத்த
ப்ருங்கோऽஹம் ॥

**ओषधीनां**-ஒஷதிகளுடைய, **ओजः**-வீர்யமாக, **अहं**-நான் (இருக்கிறேன்). **अहं**-நான், **ओतप्रोतायमानभुवनः**-உலகம் முழுவதும் ஓதமாயும் ப்ரோதமாயுமிருப்பவன்.

(குறுக்கிலும் நெடுக்கிலும் நூல்களை வஸ்திரத்தில் இருப்பது போல் நானே பிரபஞ்சம் முழுவதும் இருக்கிறேன்) अहं-நான், ओंकारसारसोल्लसदात्मसुखामोदमत्तभृङ्गः-ஓங்கார மென்னும் தாமரைப்பூவில் விளங்குகிற ஆத்மஸுகமென்னும் வாஸனையால் லாகிரிகொண்ட வண்டாக இருக்கிறேன்.

ஓஷதிகளிலுள்ள (பலம் கொடுக்கக்கூடிய) சக்தி நான். உலகங்களில் நெடுகிலும் குறுக்கிலும் ஊடுருவியிருப்பது நான். ஓம்காரமாகிற தாமரையிலிருந்து வெளியில் வீசுகிற ஆத்ம ஸுகமென்னும் வாஸனையினால் மதம் பிடித்திருக்கும் வண்டு நான். (114)

औषधमहमशुभानामौपाधिकधर्मजालरहितोऽहम् ।
औदार्यातिशयोऽहं विविधचतुर्वर्गवितरणपरोऽहम् ॥ ११५ ॥

ஔஷதமஹமசுபாநாமௌபாதிக தர்மஜால
ரஹிதோZஹம் ।
ஔதார்யாதிசயோஹம் விவித சதுர்வர்க விதரண
பரோZஹம் ॥

अहं-நான், अशुभानां-அசுபங்களுக்கு, औषधं-(போக்கும்) மருந்து. अहं-நான், औपाधिकधर्मजालरहितः - உபாதியினால் ஏற்படும் தர்மக்கூட்டங்களற்றவன், अहं-நான், औदार्यातिशयः ஔதார்யத்தின் சிறப்பான அம்சமாக இருக்கிறேன். अहं-நான், विविधचतुर्वर्गवितरणपरः-பலவிதமான நான்கு புருஷார்த்தங்களையும் கொடுப்பதில் ஈடுபட்டவன்.

அசுபங்களையெல்லாம் போக்கடிக்கும் மருந்து நான். உபாதிகளுக்குரிய எவ்வித தர்ம ஸமூஹங்களுமற்றவன் நான். மேலான உதாரத்தன்மையுடையவன் நான். பலவிதமான (தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்கிற) நான்கு புருஷார்த்தங்களைக் கொடுப்பதில் ஈடுபட்டவன் நான். (115)

अंकुशमहमखिलानां महत्तया मत्तवारणेन्द्राणाम् ।
अम्बरमिव विमलोऽहं शम्बररिपुजातविकृतिरहितोऽहम् ॥

அங்குசமஹமகிலாநாம் மஹத்தயா மத்த
வாரணேந்த்ராணாம் ।
அம்பரமிவ விமலோஹம் சம்பரரிபு ஜாத விக்ருதி
ரஹிதோऽஹம் ॥

**अहं**-நான், **महत्तया**-சிறப்புத்தன்மையால், **मत्तवारणेन्द्राणां अखिलानां**-மதம்பிடித்த சிறந்த யானை போலுள்ளவர்கள் எல்லோருக்கும், **अंकुशं**-(அடக்கும்) துறட்டியாக இருப்பவன். **अहं**-நான், **अम्बरमिव**-ஆகாயம் போல, **विमलः**-நிர்மலமானவன். **अहं**-நான், **शम्बररिपुजातविकृतिरहितः**-சம்பராஸுரனின் எதிரியான காமனால் உண்டாகும் விகாரங்களற்றவன்.

பெருந்தன்மையினால் மதம் பிடித்த சிறந்த யானை போன்ற யாவர்களுக்கும் (அடக்கியாளும்) துறட்டியாய் இருப்பவன் நான். ஆகாசம்போல் நிர்மலமாயிருப்பவன் நான். சம்பராஸுரனுடைய சத்துருவான மன்மதனால் ஏற்படும் எவ்வித மாறுபாடுமில்லாதவன் நான். (116)

अस्तविकल्पमतीनामस्खलदुपदेशगम्यमानोऽहम् ।
अस्थिरसुखविमुखोऽहं सुस्थिरसुखबोधसंपदुचितोऽहम् ॥

அஸ்த விகல்ப மதீநாமஸ்கலதுபதேச கம்யமானோऽஹம் ।
அஸ்த்திர ஸுக விமுகோऽஹம் ஸுஸ்த்திர
ஸுகபோத ஸம்பதுசிதோऽஹம் ॥

**अहं**-நான், **अस्तविकल्पमतीनां**-ஸந்தேஹம் நீங்கிய புத்தி உள்ளவர்களுக்கு, **अस्खलदुपदेशगम्यमानः**-நழுவாத உபதேசத்தால் அறியப்படுகிறவன். **अहं**-நான், **अस्थिरसुखविमुखः**-நிலையில்லாத ஸுகங்களில் ஈடுபடாதவன். **अहं**-நான். **सुस्थिरसुखबोधसंपदुचितः**-நன்கு நிலையாயிருக்கும் ஆனந்தானுபவமென்னும் செல்வம் பெறத்தகுதியுள்ளவன்.

ஸந்தேஹமற்ற புத்தியுள்ளவர்களால் நழுவாத உபதேசத்தினுல் அறிந்துகொள்ளக்கூடியவன் நான். ஸ்திரமில்லாத ஸுகங்களை புறக்கணித்தவன் நான். நன்கு ஸ்திரமாயிருக்கும் ஆனந்தானுபவமாகிற ஸம்பத்திற்கு உரித்தானவன் நான். (117)

करुणारसभरितोऽहं कबलितकमलासनादिलोकोऽहम् ।
कलुषाकृतिविधुरोऽहं कल्मषसुकृतोपलेपरहितोऽहम् ॥ ११८ ॥

கருணாரஸ பரிதோ ऽஹம் கபளித கமலாஸநாதி
லோகோऽஹம் ।
கலுஷாக்ருதி விதுரோऽஹம் கல்மஷ
ஸுக்ருதோபலேப ரஹிதோऽஹம் ॥

अहं-நான், करुणारसभरितः-க்ருபாரஸம் நிறைந்தவன். अहं-நான், कबलितकमलासनादिलोकः-தாமரை ஆஸனத்தில் அமர்ந்துள்ள ப்ரஹ்மா முதலானவர்களின் லோகங்களை விழுங்கியவன். अहं-நான், कलुषाकृतिविधुरः- கல்மஷமுள்ள உருவமற்றவன். अहं-நான், कल्मषसुकृतोपलेपरहितः-பாபம் புண்யம் இவைகளின் ஸம்பந்தமில்லாதவன்.

கருணையாகிற ரஸத்தினுல் நிரம்பினவன் நான். தாமரையை ஆஸனமாகக்கொண்ட பிரஹ்மா முதலானவர்களுடைய லோகங்களை யெல்லாம் விழுங்கினவன் நான். [ஸத்யாதி லோகங்களில் கிடைக்கக்கூடிய ஆனந்தமெல்லாம் என் ஆனந்தத்தில் உள் அடங்கியது] அழுக்கு உள்ள ரூபமில்லாதவன் நான். பாபம் புண்யம் (ஆகிய இரண்டுவித) பூச்சுக்களும் இல்லாதவன் நான். (118)

खानामगोचरोऽहं खातीतोऽहं खपुष्पभवगोऽहम् ।
खलजनदुरासदोऽहं खण्डज्ञानापनोदनपरोऽहम् ॥ ११९ ॥

காநாமகோசரோऽஹம் காதீதோऽஹம் கபுஷ்பபவகோऽஹம் ।
கலஜந துராஸதோऽஹம் கண்ட ஞாநாபநோதன
பரோऽஹம் ॥

**खानां**-இந்திரியங்களுக்கு, **अगोचरः**-விஷயமாகாதவன் (கண் காது முதலான இந்திரியங்களால் அறியமுடியாதவன்), **अहं**-நான். **खातीतः**-ஆகாசத்திற்கும் அப்பால் பட்டவன், **अहं**-நான். **खपुष्पभवगः**-ஆகாசபுஷ்பம் போன்ற ஸம்ஸாரத்தில் இருப்பவன், **अहं**-நான். **खलजनदुरासदः**-துஷ்டஜனங்களால் அடைய முடியாதவன், **अहं**-நான். **खण्डज्ञानापनोदनपरः**-துண்டு துண்டாகவரும் அல்பஞானங்களைப்போக்குவதில் ஈடுபட்டவன், **अहम्**-நான்.

நான் இந்திரியங்களுக்கு எட்டாதவன். ஆகாசத்திற்கும் அதீதமானவன் நான். ஆகாச புஷ்பம்போல் இல்லாமலிருக்கிற ஸம்ஸாரத்தில் இருப்பவன் நான். துஷ்ட ஜனங்களால் அடைய முடியாதவன் நான். சிறு சிறு ஞானங்களைப் போக்கடிப்பதில் ஈடுபட்டவன் நான். (119)

**गलितद्वैतकथोऽहं देहीभवदखिलमूलहृदयोऽहम् ।**
**गन्तव्योऽहमनीहैर्गत्यागतिरहितपूर्णबोधोऽहम् ॥ १२० ॥**

கலித த்வைத கதோऽஹம் தேஹீபவதகில
மூல ஹ்ருதயோऽஹம் ।
கந்தவ்யோऽஹமநீஹைர் கத்யாகதி ரஹித பூர்ண
போதோऽஹம் ॥

**अहं**-நான், **गलितद्वैतकथः**-வேற்றுமைப்பேச்சு அற்றவன் **अहं**-நான், **देहीभवदखिलमूलहृदयः**-சரீரத்துடன் கூடியுள்ள எல்லோருக்கும் மூலஹிருதயமாக இருப்பவன் (ஸமஷ்டி அந்தக்கரணாபிமானி ஹிரண்யகர்பனும் நானே), **अहं**-நான், **अनीहैः**-ஆசையற்றவர்களால், **गन्तव्यः**-அடையத்தக்கவன். **अहं**-நான், **गत्यागतिरहितपूर्णबोधः**-போக்குவரத்து இல்லாத நிறைந்த ஞானஸ்வரூபன்.

இரண்டென்ற பேச்சையே விட்டவன் நான். சரீரமுள்ளவனென்று ஏற்பட்ட எல்லாருக்கும் மூலமாயுள்ள ஹ்ருதயம் நான், ஆசையற்றவர்களால் அடையு

வேண்டியவன் நான். போகிறது, வருகிறது, என்பதெல்லாம் இல்லாத பரிபூர்ண ஞானஸ்வரூபன் நான். (120)

**घनतरविमोहतिमिरप्रकरप्रध्वंसभानुनिकरोऽहम् ।**
**घटिकावासररजनीवत्सरयुगकल्पकालभेदोऽहम् ॥ १२१ ॥**

*கநதர விமோஹ திமிர ப்ரகர ப்ரத்வம்ஸ*
*பாநு நிகரோऽஹம் ।*
*கடிகா வாஸர ரஜநீ வத்ஸர யுக கல்ப காலபேதோऽஹம் ॥*

**अहं**-நான், **घनतर**-மிகவும் அடர்த்தியான, **विमोह-तिमिरप्रकर**-மோஹமென்னும் இருள்கூட்டத்தை, **प्रध्वंस**-அடியோடு அழிப்பதில், **भानुनिकरः**-ஸூர்யனுடைய கூட்டமாயிருப்பவன். **अहं**-நான், **घटिका**-நாழிகை, **वासर**-பகல், **रजनी**-இரவு, **वत्सर**-வருஷம், **युग**-யுகம், **कल्पकालभेदः**-கல்பம் என்னும் பலவித காலமாக இருப்பவன்.

வெகு கனமான மோஹமாகிற இருட்டுக் கூட்டத்தை நாசம் செய்யக்கூடிய ஸூர்ய ஸமூஹம் நான். நாழிகை, பகல், இரவு, வருஷம், யுகம், கல்பம், என்றெல்லாமாக காலத்தின் வேற்றுமையாயிருப்பவனும் நான். (121)

**चरदचरदात्मकोऽहं चतुरमतिश्लाघनीयचरितोऽहम् ।**
**चपलजनदुर्गमोऽहं चञ्चलभवजलधिपारदेशोऽहम् ॥ १२२ ॥**

*சரதசரதாத்மகோऽஹம் சதுரமதி ச்லாகநீய சரிதோऽஹம் ।*
*சபலஜந துர்கமோऽஹம் சஞ்சல பவ ஜலதி*
*பாரதேசோऽஹம் ॥*

**अहं**-நான், **चरदचरदात्मकः**-ஜங்கம ஸ்தாவர ஸ்வரூபமாக இருப்பவன். **अहं**-நான், **चतुरमतिश्लाघनीयचरितः**-திறமையுள்ள புத்திசாலிகளால் புகழத்தக்க நடத்தை உள்ளவன். **अहं**-நான், **चपलजनदुर्गमः**-சஞ்சலஸ்வபாவமுள்ள ஜனங்களால் அடையமுடியாதவன், **चञ्चलभवजलधिपारदेशः**-

சஞ்சலமான பவஸாகரத்தின் அக்கரைப் பிரதேசமாக இருப்பவன் अहम्-நான்.

அசையும் பொருளாகவும் அசையாப் பொருளாகவும் இருப்பது நான். நல்ல புத்திசாலிகளால் புகழத்தக்க நடத்தையுள்ளவன் நான். சபல ஸ்வபாவமுள்ள ஜனங்களால் அடைய முடியாதவன் நான். இடைவிடாது ஸஞ்சரித்துக்கொண்டேயிருக்கிற ஸம்ஸாரமாகிற கடலுக்கு அக்கரையிலுள்ள தேசமாயிருப்பவன் நான். (122)

छन्दःसिन्धुनिगूढज्ञानसुखास्वादमोदमानोऽहम् ।
छलपदविहितमतीनां छन्नोऽहं शान्तिमार्गगम्योऽहम् ॥ १२३ ॥

சந்தஸ்ஸிந்து நிகூட ஞான ஸுகாஸ்வாத
மோதமானோZஹம் ।
சலபத விஹித மதீநாம் சந்நோZஹம்
ஶாந்திமார்க கம்யோZஹம் ॥

अहं-நான், छन्दःसिन्धु-வேதமாகிற ஸமுத்திரத்தில், निगूढ-மறைந்துள்ள, ज्ञानसुखास्वाद-ஞானாநந்தத்தை அநுபவிப்பதால், मोदमानः-ஸந்தோஷமடைகிறவன். अहं-நான், छलपदविहितमतीनां-கபடவழியில் செலுத்திய புத்தியுள்ளவர்களுக்கு, छन्नः-மறைந்திருப்பவன். अहं-நான், शान्तिमार्गगम्यः சாந்திவழியில் அடையத்தக்கவன்.

வேதமாகிற ஸமுத்திரத்தில் அமிழ்ந்து கிடக்கும் ஞானத்தினுல் ஏற்படக்கூடிய ஸுகத்தை ருசி பார்த்து ஸந்தோஷிக்கிறவன் நான். ஏமாற்றவழியில் புத்தியை செலுத்துவோருக்கு நான் மறைந்துள்ளவன். சாந்தி என்ற வழியில் அடையத்தகுந்தவன் நான். (123)

जलजासनादिगोचरपञ्चमहाभूतमूलभूतोऽहम् ।
जगदानन्दकरोऽहं जन्मजरामरणरोगरहितोऽहम् ॥ १२४ ॥

ஜலஜாஸநாதி கோசர பஞ்சமஹாபூத மூலபூதோऽஹம் ।
ஜகதாநந்தகரோऽஹம் ஜந்ம ஜரா மரண
ரோகரஹிதோऽஹம் ॥

अहं-நான், जलजासनादिगोचर-ப்ரஹ்மா முதலியவர்களுக்குத் தெரிகிற, पञ्चमहाभूत-ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களுக்கும், मूलभूतः-மூலகாரணமாக இருப்பவன். अहं-நான், जगदानन्दकरः-உலகிற்கு ஸுகத்தை உண்டுபண்ணுபவன். अहं-நான், जन्मजरामरणरोगरहितः-பிறப்பு, மூப்பு, சாவு, பிணி இவைகளற்றவன்.

பிரஹ்மா முதலானவர்களுக்கு (மாத்திரம்) அறியக்கூடிய (ஸூக்ஷ்மமான) ஐந்து (ஆகாசம், வாயு, தேஜஸ், ஆபஸ், பிருத்வீ என்கிற) மஹா பூதங்களுக்கும் காரணமாயிருப்பவன் நான். ஜகத்தில் ஆனந்தத்தைச் செய்கிறவன் நான். பிறப்பு, மூப்பு, இறப்பு, வியாதி, இவைகளற்றவன் நான். *(124)*

झंकृतिहुंकृतिशिञ्जितबृंहितमुखविविधनादभेदोऽहम् ।
झटितिघटितात्मवेदनदीपपरिस्फुरितहृदयभवनोऽहम् ॥१२५॥

ஜங்க்ருதி ஹுங்க்ருதி ஶிஞ்ஜித ப்ரும்ஹித
முகவிவித நாத பேதோऽஹம் ।
சடிதி கடிதாத்மவேதந தீபபரிஸ்புரித ஹ்ருதய
பவநோऽஹம் ॥

अहं-நான், झंकृति-ஜங்காரம் (வண்டுகளின் நாதம்), हुंकृति-ஹுங்காரம், शिंजित-ஆபரணங்களின் ஒலி, बृंहित-யானையின் சப்தம், मुख-இவை முதலான, विविध-பலவித नादभेदः-நாதப்பிரிவுகளாக இருப்பவன். अहं-நான், झटिति-வெகு விரைவில், घटित-ஏற்பட்ட, आत्मवेदन-ஆத்மஞானம் என்ற, दीप-தீபத்தினால், परिस्फुरित-நன்கு பிரகாசிக்கிற, हृदयभवनः-மனமாகிற வீட்டை உடையவன்.

ஜம்காரம், ஹும்காரம், சிஞ்ஜிதம், ப்ரும்ஹிதம், முதலான பலவித நாதங்களாக வேற்றுமையடைந்திருப்

பவன் நான். தாமஸமன்னியில் ஏற்பட்ட ஆத்மஞானம் என்ற தீபத்தினுல் நன்கு பிரகாசிக்கும் ஹ்ருதயமாகிற வீட்டை உடையவன் நான். (125)

ज्ञानमहं ज्ञेयमहं ज्ञाताऽहं ज्ञानसाधनगणोऽहम् ।
ज्ञातृज्ञानज्ञेयविनाकृतमस्तित्वमात्रमेवाहम् ॥ १२६ ॥

ஞானமஹம் ஜ்ஞேயமஹம் ஞாதாऽஹம் ஞான
ஸாதன கணோऽஹம் ।
ஞாத்ரு ஞான ஜ்ஞேய விநாக்ருதமஸ்தித்வமாத்ரமேவாஹம் ॥

अहं-நான், ज्ञानं-அறிவுஸ்வருபம் अहं-நான், ज्ञेयं-அறியப்படும் பொருள். अहं-நான், ज्ञाता-அறிகிறவன். अहं-நான், ज्ञानसाधनगणः-ஞானத்தைத் தரும் காரணங்களின் கூட்டம். अहं-நான், ज्ञातृज्ञानज्ञेयविनाकृतं-(உண்மையில்) அறிகிறவன், அறிவு, அறியப்படும் வஸ்து என்ற வேற்றுமையில்லாத, अस्तित्वमात्रमेव -'இருக்கிறது' என்ற தன்மையாகமட்டும் இருப்பவன்.

அறிவு நான், அறியப்படுவதும் நான், அறிகிறவனும் நான். அறிவிற்கு ஸாதனமாயிருக்கும் யாவும் நான். அறிகிறவன், அறிவு, அறியப்படுவது, என்றதெல்லாம் இல்லாத "இருக்கிறது" என்ற தன்மையுடன் மாத்திரம் இருப்பவன் நான். (126)

तत्त्वातीतपदोऽहं तनुरहमस्मीति भावरहितोऽहम् ।
तामसदुरधिगमोऽहं तत्त्वंपदबोधबोध्यहृदयोऽहम् ॥ १२७ ॥

தத்வாதீத பதோऽஹம் தனுரஹமஸ்மீதி
பாவரஹிதோऽஹம் ।
தாமஸ துரதிகமோऽஹம் தத்த்வம்பத போத
போத்யஹ்ருதயோऽஹம் ॥

अहं-நான், तत्त्वातीतपदः-தத்வங்களுக்கு அப்பால்பட்ட நிலையுள்ளவன். 'अहं-நான், तनुः अस्मि-சரீரமாக இருக்கிறேன்'

इति–என்ற, भावरहितः–எண்ணமில்லாதவன் अहं–நான். तामसदुरधिगमः–தாமஸ ஸ்வபாவமுள்ளவர்களால் அடைய முடியாதவன், अहं–நான். तत्त्वंपदबोधबोध्यहृदयः–'தத்த்வம்' ('நீ அது') என்ற பதங்களின் ஞானத்தால் அறியப்படும் ஹிருதயத்திலுள்ள ஆத்மாவாக இருப்பவன் अहं–நான்.

மூலப்ரக்ருதி, மஹத்தத்வம், அஹங்காரதத்வம், தன் மாத்திரைகள் என்னும் ஸூக்ஷ்ம பூதங்கள் 5, ஞானேந்திரயங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, பிராணன் 5, மனம் இந்த இருபத்திநான்கு தத்வங்களுக்கும் அதீதமான நிலை உள்ளவன் நான். சரீரமே நானென்ற எண்ணமற்றவன் நான். தமஸ் ஸ்வபாவமுள்ளவர்களுக்கு ஸுலபமாக அறிய முடியாதவன் நான். தத் த்வம் (அது நீ) என்ற வார்த்தைகளின் ஞானத்தினல் அறிவிக்கத்தகுந்த ஹ்ருதயத்தோடு கூடினவன் நான் (அல்லது ரஹஸ்ய தாத்பர்யம் நான்.)

दैवतदैत्यनिशाचरमानवतिर्यङ्महीधरादिरहम् ।
देहेन्द्रियरहितोऽहं दक्षिणपूर्वादिदिग्विभागोऽहम् ॥ १२८ ॥

தைவத தைத்ய நிசாசர மானவ திர்யங் மஹீதராதிரஹம் ।
தேஹேந்த்ரிய ரஹிதோऽஹம் தக்ஷிண பூர்வாதி
திக்விபாகோऽஹம் ॥

अहं–நான், दैवत–தேவர், दैत्य–அஸுரர், निशाचर–ராக்ஷஸர், मानव–மனிதர், तिर्यक्–மிருகம், महीधरादिः–மலை முதலியனவாக இருப்பவன். अहं–நான், देहेन्द्रियरहितः சரீரம், இந்திரியங்களற்றவன். अहं–நான், दक्षिणपूर्वादिदिग्विभागः–தெற்கு, கிழக்கு முதலான திசைகளின் பிரிவாக இருப்பவன்.

தேவன், அஸுரன், ராக்ஷஸன், மனிதன், மிருகம், மலை, முதலானதுகளாக இருப்பதும் நான். தேஹமாவது இந்திரியமாவது இல்லாதவன் நான். தெற்கு கிழக்கு முதலிய திக்குகளின் பிரிவும் நான். (128)

धर्माधर्ममयोऽहं धर्माधर्मादिबन्धरहितोऽहम् ।
धार्मिकजनसुलभोऽहं धन्योऽहं धातुरादिभूतोऽहम् ॥ १२९ ॥

தர்மாதர்மமயோऽஹம் தர்மாதர்மாதி பந்தரஹிதோऽஹம் ।
தார்மிக ஜன ஸுலபோऽஹம் தந்யோऽஹம் தாதுராதி
பூதோऽஹம் ॥

अहं-நான், धर्माधर्ममयः தர்மமாயும் அதர்மமாயும் இருப்பவன் (ஆனால் உண்மையில்) अहं-நான், धर्माधर्मादिबन्धरहितः-தர்மம், அதர்மம் இவைகளால் உண்டாகும் பந்தங்களற்றவன். अहं-நான், धार्मिकजनसुलभः - தர்மத்தையே செய்துவரும் ஜனங்களால் எளிதாக அடையத்தக்கவன். अहं-நான், धन्यः-பாக்யசாலி, अहं-நான், धातुरादिभूतः-ப்ரஹ்மாவுக்குக் காரணமாயிருப்பவன்.

தர்மமாயும் அதர்மமாயும் இருப்பவன் நான். தர்மம் அதர்மம் முதலான கட்டுப்பாடு இல்லாதவன் நான். தர்மத்தில் ஈடுபடும் ஜனங்களால் சிரமமன்னியில் அடையக் கூடியவன் நான். நான் பாக்யசாலி. பிரஹ்மாவிற்கும் காரணமாயிருப்பவன் (அல்லது எல்லாவற்றிற்கும் முன்னுள்ள பீஜமாயிருப்பவன்) நான். (129)

नामादिविरहितोऽहं नरकस्वर्गापवर्गरहितोऽहम् ।
नादान्तवेदितोऽहं नानाविधनिखिलनिगमसारोऽहम् ॥ १३० ॥

நாமாதி விரஹிதோऽஹம் நரக ஸ்வர்காபவர்க
ரஹிதோऽஹம் ।
நாதாந்த வேதிதோऽஹம் நாநாவித நிகில நிகம
ஸாரோऽஹம் ॥

अहं-நான், नामादिविरहितः-பெயர் முதலியவைகளற்றவன். अहं-நான், नरकस्वर्गापवर्गरहितः-நரகம், ஸ்வர்க்கம், மோக்ஷம் இவைகளற்றவன். अहं-நான், नादान्तवेदितः-நாதத்தின் முடிவில் அறியப்பட்டவன். अहं-நான், नानाविध-பலவிதமான, निखिलनिगमसारः-எல்லாவேதங்களுடையவும் ஸாரமாயிருப்பவன்.

பெயர் முதலானது அற்றவன் நான். நரகம், ஸ்வர்க்கம், மோக்ஷம், எல்லாம் கிடையாதவன் நான். நாதத்தின் முடிவில் அறியப்படுபவன் நான். பலவிதமான ஸகல வேதங்களின் ஸாரம் நான். (130)

परजीवभेदबाधकपरमार्थज्ञानशुद्धचित्तोऽहम् ।
प्रकृतिरहं विकृतिरहं परिणतिरहमस्मि भागधेयानाम् ॥ १३१ ॥

பர ஜீவ பேத பாதக பரமார்த்த ஞான சுத்த சித்தோZஹம் ।
ப்ரக்ருதிரஹம் விக்ருதிரஹம் பரிணதிரஹமஸ்மி
பாகதேயாநாம் ॥

अहं-நான், परजीव-பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள, भेद-வேற்றுமையை, बाधक-போக்கடிக்கும், परमार्थ-ज्ञान-தத்வஞானத்தால், शुद्धचित्तः-பரிசுத்தமான மனமுடையவன். अहं-நான், प्रकृतिः-காரணம், अहं-நான், विकृतिः-கார்யம், अहं-நான், भागधेयानां-பாக்யங்களின், परिणतिः-பரிபாகமாக, अस्मि-இருக்கிறேன்.

பரமாத்மா ஜீவாத்மா என்கிற வேற்றுமையைப் போக்கடிக்கும் வாஸ்தவமான தத்வஞானத்தினால் சுத்தமாயிருக்கும் சித்தத்தை உடையவன் நான். நான்தான் பிரகிருதி (மூலகாரணம்), நானே விக்ருதி (கார்யங்கள்). பாக்யங்களின் பரிபாகமும் நானே. (131)

फणधरभूधरवारणविग्रहविधृतप्रपञ्चसारोऽहम् ।
फालतलोदितलोचनपावकपरिभूतपञ्चबाणोऽहम् ॥ १३२ ॥

பணதர பூதர வாரண விக்ரஹ வித்ருத ப்ரபஞ்ச ஸாரோZஹம்।
பாலதலோதித லோசன பாவக பரிபூத பஞ்சபாணோZஹம் ॥

फणधर-ஆதிசேஷன், भूधर-குலபர்வதங்கள், वारण-திக்கஜங்கள் இவைகளின், विग्रह-சரீரங்களால், विधृत-தாங்கப்பட்ட, प्रपञ्चसारः-பிரபஞ்சத்தின் ஸாரம், अहं-நான். फालतलोदित-நெற்றிப்பிரதேசத்தில் கிளம்பிய, लोचन-

கண்ணின், पावक-நெருப்பால், परिभूत-தாக்கப்பட்ட, पञ्चबाणः-மன்மதனை உடைய பரமசிவன், अहं-நான்.

(ஆதிசேஷனுை) பாம்பாகவும் மலைகளாகவும் (திக்கஜங்களான) யானைகளாகவும் ரூபம் தரித்து சுமக்கப் படும் பிரபஞ்சத்தின் ஸாரம் நான். நெற்றிப்பிரதேசத்தி லேற்பட்ட கண்ணின் தீயினுல் மன்மதனை ஜயித்தவனும் நான். (132)

बद्धो भवामि नाहं बन्धान्मुक्तस्तथाऽपि नैवाहम् ।
बोध्यो भवामि नाहं बोधोऽहं नैव बोधको नाहम् ॥ १३३ ॥

பத்தோ பவாமி நாஹம் பந்தான் முக்தஸ்ததாபி நைவாஹம்।
போத்யோ பவாமி நாஹம் போதோZஹம் நைவ போதகோ நாஹம் ॥

अहं-நான், बद्धः-கட்டுப்பட்டவனுக, न भवामि-இருக்க வில்லை. तथा-அவ்வாறே, बन्धात्-கட்டிலிருந்து, मुक्तोपि-விடுபட்டவனுகவும், अहं-நான், नैव-இல்லவேயில்லை, अहं-நான், बोध्यः-அறியத்தக்கவனுக, न भवामि-இருக்கவில்லை. अहं-நான், नैव बोधः-அறிவாகவும் இல்லை. अहं-நான், बोधकः-அறிவிக்கிறவனுகவும், न-இல்லை.

நான் கட்டுப்பட்டவனுமில்லை, அப்படியே கட்டிலிருந்து விடுபட்டவனும் நான் இல்லவேயில்லை அறிவிக்கவேண்டிய வனும் நான் அல்ல. நான் அறிவும் அல்ல. நான் அறிவிக்கிறவனும் இல்லவேயில்லை. (133)

भक्तिरहं भजनमहं भुक्तिरहं भुक्तिमुक्तिरहमेव ।
भूतानुशासनोऽहं भूतभवद्भव्यमूलभूतोऽहम् ॥ १३४ ॥

பக்திரஹம் பஜனமஹம் புக்திரஹம் புக்திமுக்திரஹமேவ।
பூதானுசாஸனோZஹம் பூதபவத்பவ்யமூலபூதோZஹம் ॥

अहं-நான், भक्तिः-பக்தி, अहं-நான், भजनं-பக்தியின் ஸாதனம், अहं-நான், भुक्तिः-போகம், भुक्तिमुक्तिः-போகத்

திலிருந்து விடுபட்ட நிலையும் (மோக்ஷமும்), **अहमेव**-நானே. **अहं**-நான், **भूतानुशासनः**-பூதங்களை அடக்கி ஆள்பவன். **अहं**-நான், **भूतभवद्भव्यमूलभूतः**-இருந்தது, இருக்கிறது, இருக்கப் போவது என்ற மூன்று காலங்களிலுமுள்ள வஸ்துக்களுக்கும் காரணமாக இருப்பவன்.

பக்தி என்பது நான்தான். பஜனமும் நான், போகமும் நான். போகத்திலிருந்து விடுபட்ட நிலையும், நான் தான். ஸகல பூதங்களையும் கட்டளையிடுகிறவன் நான். இருந்தது, இருப்பது, இருக்கப்போவது எல்லாவற்றிற்கும் மூலமாயிருப்பவன் நான். (134)

**मान्योऽहमस्मि महतां मन्दमतीनाममाननीयोऽहम् ।**
**मदरागमानमोहितमानसदुर्वासनादुरापोऽहम् ॥ १३५ ॥**

மாந்யோऽஹமஸ்மி மஹதாம் மந்தமதீநாமமாநநீயோऽஹம்।
மதராக மான மோஹித மாநஸ துர்வாஸநாதுராபோऽஹம் ॥

**अहं**-நான், **महतां**-பெரியோர்களாலும், **मान्यः**-கௌரவிக்கத்தக்கவனாக, **अस्मि**-இருக்கிறேன். **अहं**-நான், **मन्दमतीनां**-அல்பபுத்தி உள்ளவர்களால், **अमाननीयः**-கௌரவிக்கப்படாதவன், **मद**-கொழுப்பு, **राग**-ஆசை, **मान**-கர்வம் இவைகளால், **मोहित**-மயங்கிய, **मानस**-மனமுள்ளவர்களின், **दुर्वासना**-கெட்ட வாஸனைகளால், **दुरापः**-அடையத்தகாதவன், **अहम्**-நான்.

மஹான்களால் நான் பகுமானிக்கத்தகுந்தவன். மந்த புத்தியுள்ளவர்களால் பகுமானிக்கப்படாதவன். கொழுப்பு, ஆசை, அஹங்காரம் இவைகளால் மயங்கின மனஸோடு கூடியவர்களின் கெட்டவாஸனைக்கு அகப்பட மாட்டாதவன் நான். (135)

**यजनयजमानयाजकयागमयोऽहं यमादिरहितोऽहम् ।**
**यमवरुणयक्षवासवराक्षसमरुदीशवन्हिरूपोऽहम् ॥ १३६ ॥**

யஜந யஜமாந யாஜக யாக மயோऽஹம் யமாதி
ரஹிதோऽஹம் ।
யம வருண யக்ஷ வாஸவ ராக்ஷஸ மருதீஶ வஹ்னி
ரூபோऽஹம் ॥

अहं-நான், यजन-யாகம் செய்தல், यजमान-யாகம் செய்கிறவன், याजक-யாகம் செய்துவைக்கிறவன், यागमयः-யக்ஞம் இவைகளின் ஸ்வரூபமாக இருப்பவன். अहं-நான், यमादिरहितः-யமம் முதலான ஸாதனங்களற்றவன். यम-யமன் वरुण-வருணன், यक्ष-யக்ஷன் (குபேரன்), वासव-இந்திரன், राक्षस-ராக்ஷஸன் (நைர்ருதன்), मरुत् -வாயு, ईश-ஈசானன், वह्नि-அக்னி, रूपः-என்ற திக்பாலகர்களின் ஸ்வரூபம், अहं-நான்.

யாகம் செய்தல், யாகம் செய்கிறவன், யாகம் செய்து வைக்கிறவன், யாகம், எல்லாமாக இருப்பதும் நான். யமம் முதலானவைகள் இல்லாதவன் நான். யமன், வருணன், யக்ஷன், இந்திரன், ராக்ஷஸன், வாயு, ஈசானன், அக்னி, என்றெல்லாம் ரூபம் தரிப்பவன் நான். (136)

रक्षाविधानशिक्षावीक्षितलीलावलोकमहिमाऽहम् ।
रजनीदिवसविरामस्फुरदनुभूतिप्रमाणसिद्धोऽहम् ॥ १३७ ॥

ரக்ஷா விதாந ஶிக்ஷா வீக்ஷித லீலாவலோக மஹிமாऽஹம் ।
ரஜநீதிவஸ விராம ஸ்புரதநுபூதி ப்ரமாண ஸித்தோऽஹம் ॥

अहं-நான், रक्षाविधानशिक्षा-ரக்ஷை செய்வதன் அப்யாஸத்தால், वीक्षित-பார்க்கப்பட்ட, लीलावलोक-லீலா கடாக்ஷத்தின், महिमा-மஹிமை உள்ளவன். अहं-நான், रजनी-இரவு, दिवस-பகல், विराम-இவைகளின் முடிவில், स्फुरदनुभूति-பிரகாசிக்கிற அனுபவமாகிற, प्रमाण-பிரமாணத்தால், सिद्धः-ஸித்தமானவன்.

ரக்ஷை செய்வதன் அப்யாஸத்தால் பார்க்கப்பட்ட லீலா கடாக்ஷமஹிமையுள்ளவன் நான். இரவு பகல் இவற்றின்

முடிவில் பிரகாசிக்கும் அநுபவப்ரமாணத்தால் ஸித்த மானவன் நான்.

[இந்திரியங்களையும் மனதையும் வெளி விஷயங்களில் போகவொட்டாதபடி தடுத்துக் காப்பாற்றவேண்டும் இப்படி ஒருதடவை இரண்டுதடவைகளல்ல, பலதடவைகள் அடிக்கடி தடுத்துத் தடுத்து அப்யாஸம் செய்துவந்தால் அவை உள்ளேயே நிலைத்து நிற்கும். அப்பொழுதுதான் ஈசுவரனுடைய லீலா கடாக்ஷமஹிமைகளைக் காணலாம். இரவில் கடைசியில் தூக்கம் முடியும்பொழுது தூக்கமும் இல்லாமல் விழிப்பும் இல்லாமல் ஓர் அனுபவம் யாவருக்கும் ஏற்படுகிறது. இதுபோலவே பகல் முடிந்து தூங்க ஆரம்பிக்கும் போதும் விழிப்பும் இல்லாமல் தூக்கமும் இல்லாமல் ஓர் அனுபவம் ஏற்படுகிறது இதில் பிரபஞ்சம் தோன்றுவதில்லை. இந்த அனுபவம்தான் பிரபஞ்ச ஸம்பந்த மில்லாத ப்ரஹ்மம் இருப்பதற்கு பிரமாணமாகும்.] (137)

लक्षणलक्ष्यमयोऽहं लाक्षणिकोऽहं लयादिरहितोऽहम् ।
लाभालाभमयोऽहं लब्धव्यानामलभ्यमानोऽहम् ॥ १३८ ॥

லக்ஷண லக்ஷ்ய மயோ ஽ஹம் லாக்ஷணிகோ ஽ஹம் லயாதி
ரஹிதோ ஽ஹம் ।
லாபாலாப மயோ ஽ஹம் லப்தவ்யானுமலப்யமானோ ஽ஹம் ॥

अहं-நான், लक्षणलक्ष्यमयः-லக்ஷணம், லக்ஷ்யம் இவை களின் ஸ்வரூபம். अहं-நான், लाक्षणिकः-லக்ஷணம் அறிந் தவன். अहं-நான், लयादिरहितः-லயம் முதலியவைகள் அற்றவன். अहं-நான், लब्धव्यानां-அடையத்தக்க வஸ்துக் களின், लाभालाभमयः-அடைவதும் அடையாததுமாயிருப் பவன். अलभ्यमानः-அடையப்படாததும், अहं-நான்.

லக்ஷணமும் லக்ஷ்யமும் நானே. லக்ஷணம் அறிந்த வனும் நான். லயம் முதலானவையில்லாதவன் நான். அடையவேண்டிய பதார்த்தங்கள் கிடைப்பதும் கிடைக் காததும் நானே. அடையப்படாமலிருப்பவன் நான். (138)

वर्णाश्रमरहितोऽहं वर्णमयोऽहं वरेण्यगण्योऽहम् ।
वाचामगोचरोऽहं वचसामर्थेन गम्यमानोऽहम् ॥ १३९ ॥

வர்ணாச்ரம ரஹிதோஹம் வர்ணமயோZஹம் வரேண்ய
கண்யோZஹம் ।
வாசாமகோசரோZஹம் வசஸாமர்த்தேன
கம்யமானோZஹம் ॥

अहं-நான், वर्णाश्रमरहितः-வர்ணம், ஆச்ரமம் அற்றவன். अहं-நான், वर्णमयः-வர்ணஸ்வரூபம். अहं-நான், वरेण्यगण्यः-மிகச்சிறந்தவர்களால் புகழத்தக்கவன். अहं-நான், वाचां अगोचरः-சப்தங்களுக்கு எட்டாதவன். अहं-நான், वचसां-வார்த்தைகளுடைய, अर्थेन-பொருளினுல், गम्यमानः-அறியத் தக்கவன்.

நான் ஜாதியற்றவன், ஆசிரமமற்றவன். வர்ணமாய் இருப்பவன் நான். மிகச் சிறந்தவர்களால் புகழத் தக்கவன் நான். வாக்குகளுக்கு எட்டாதவன் நான். வார்த்தைகளின் அர்த்தம் மூலமாக (ஒருவாறு) அறியக் கூடியவன் நான். (139)

शमदमविरहितमनसां शास्त्रशतैरप्यगम्यमानोऽहम् ।
शरणमहमेव विदुषां शकलीकृतविविधसंशयगणोऽहम् ॥

ஶம தம விரஹித மநஸாம் ஶாஸ்த்ர ஶதைரப்
யகம்யமானோZஹம் ।
ஶரணமஹமேவ விதுஷாம் ஶகலீக்ருத விவித ஸம்ஶய
கணோZஹம் ॥

शमदमरहितमनसां-சமம், தமம் இவைகள் இல்லாதவர்களுக்கு, शास्त्रशतैरपि-நூற்றுக்கணக்கான சாஸ்திரங்களாலும், अगम्यमानः-அறிய முடியாதவன், अहं-நான். विदुषां-வித்வான்களுக்கு, अहमेव-நானே, शरणं-ரக்ஷகன். अहं-நான் शकलीकृतविविधसंशयगणः-பலவித ஸந்தேஹக்கூட்டங்களையும் துண்டுதுண்டுகளாகச் சிதறடித்தவன்.

சமம் தமம் இல்லாத மனஸ் உள்ளவர்களுக்கு நூற்றுக் கணக்கான சாஸ்திரங்களால்கூட அறிய முடியாதவன் நான். வித்வான்களுக்கு நானே சரணம். பலவித ஸம்சயக் கூட்டத்தையெல்லாம் துண்டித்தெறிந்தவன் நான். (140)

षड्भावविरहितोऽहं षड्गुणरहितोऽहमहितरहितोऽहम् ।
षट्कोशविरहितोऽहं षट्त्रिंशत्तत्त्वजालरहितोऽहम् ॥ १४१ ॥

ஷட்பாவ விரஹிதோऽஹம் ஷட்குண
ரஹிதோऽஹமஹித ரஹிதோऽஹம் ।
ஷட்கோச விரஹிதோஹம் ஷட்த்ரிம்சத்
தத்வஜால ரஹிதோஹம் ॥

अहं-நான், षड्भावविरहितः-ஆறுபாவங்கள் அற்றவன். अहं-நான், षड्गुणरहितः-ஆறுகுணங்களற்றவன். अहं-நான், अहितरहितः-எதிரிகளற்றவன். अहं-நான், षट्कोशविरहितः-ஆறுகோசங்களற்றவன். अहं-நான், षट्त्रिंशत्तत्त्वजालरहितः-முப்பத்தாறு தத்வங்களின் கூட்டமற்றவன்.

நான் ஆறு விதமான பாவ விகாரங்கள் இல்லாதவன், நான் ஆறு குணங்களும் இல்லாதவன். எதிரிகளற்றவன் நான். ஆறு கோசங்களும் அற்றவன் நான். 36 தத்வங்களின் கூட்டமும் இல்லாதவன் நான்.

[பிறப்பு, இருப்பு, வளர்ச்சி, மாறுபாடு, குறைவு, அழிவு இந்த ஆறுக்கும் பாவவிகாரம் என்று பெயர். உலகிலுள்ள வஸ்துக்கள் எல்லாவற்றிற்கும் இவை உண்டு. இந்த பாவவிகாரங்கள் ஆத்மாவுக்குக் கிடையாது. நான் இந்திரியங்களும் அல்ல. மனமும் அல்ல. ஆதலால் இவைகளின் ஆறு குணங்கள் எனக்குக்கிடையாது. உண்மையில் ஆத்மாவைத் தவிற வேறுபொருள் இல்லாததால் எனக்கு எதிரி கிடையாது. பாஹ்யமான பத்னீ புத்ரதனாதிகள், அன்னமயம், ப்ராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம், இவை ஆறுகோசங்கள். மூலாக்ஞானம் விலகி ஆத்மா நன்கு பிரகாசிக்கிறபடியால் ஆத்மாவை மறைத்துக்

கொண்டிருந்த இந்த ஆறு கோசங்களும் எனக்கு இல்லை. மூலப்ரக்ருதி, மஹத்தத்வம், அஹங்கார தத்வம், ஸூக்ஷ்ம பூதங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, பிராணன் 5, மனம், புத்தி, சித்தம், அஹங்காரம், ஸத்வம், ரஜஸ், தமஸ், புருஷன் என்ற 36 தத்வக்கூட்டங்களின் ஸம்பந்தமில்லாதவன். வாஸ்தவத்தில் புருஷன் ஆத்மாதான். ஆனால் அவன் அத்வைதமானபடியால் ஆத்மா 36-வது தத்வமான புருஷனாக இல்லை என்று கருத்து.] (141)

संवित्सुखात्मकोऽहं समाधिसंकल्पकल्पवृक्षोऽहम् ।
संसारविरहितोऽहं साक्षात्कारोऽहमात्मविद्यायाः ॥ १४२ ॥

ஸம்வித் ஸுகாத்மகோZஹம் ஸமாதி ஸங்கல்ப
கல்பவ்ருக்ஷோஹம் ।
ஸம்ஸார விரஹிதோZஹம் ஸாக்ஷாத்காரோZஹமாத்ம
வித்யாயா: ॥

अहं-நான், संवित्सुखात्मकः-ஞானானந்த ஸ்வரூபமாக இருப்பவன். अहं-நான், समाधिसंकल्पकल्पवृक्षः-ஸமாதியினால் ஸங்கல்பத்தினாலேயே கல்பவிருக்ஷம்போல் இருப்பவன் (கல்ப விருக்ஷம் போல் நினைத்தமாத்திரத்திலேயே எதையும் கொடுப்பவன்). अहं-நான், संसारविरहितः-ஸம்ஸாரமற்றவன். अहं-நான், आत्मविद्यायाः-ஆத்ம ஞானத்தின், साक्षात्कारः-ஸாக்ஷாத்காரமாக இருப்பவன்.

ஞானஸ்வரூபனும் ஆனந்தஸ்வரூபனும் இருப்பது நான். ஸமாதி நிலையில் நினைத்த மாத்திரம் கல்பவிருக்ஷம் போல (எதையும் கொடுக்கக்கூடியவன்) நான். நான் ஸம்ஸாரமற்றவன். ஆத்மஞானத்தை ஸாக்ஷாத்கரிப்பதே நான். (142)

हव्यमहं कव्यमहं हेयोपादेयभावशून्योऽहम् ।
हरिरहमस्मि हरोऽहं विधिरहमेवास्मि कारणं तेषाम् ॥ १४३ ॥

ஹவ்யமஹம் கவ்யமஹம் ஹேயோபாதேய பாவ
ஶூன்யோஹம் ।
ஹரிரஹமஸ்மி ஹரோ஽ஹம் விதிரஹமேவாஸ்மி காரணம்
தேஷாம் ॥

अहं-நான், हव्यं-ஹவ்யம் (தேவதைகளுக்குக் கொடுக்கும் ஹவிஸ்). अहं-நான், कव्यम्-கவ்யம் (பித்ருக்களுக்குக் கொடுக்கும் ஹவிஸ்). अहं-நான், हेयोपादेयभावशून्यः-தள்ள வேண்டியது என்றோ, எடுத்துக்கொள்ள வேண்டியது என்றோ எண்ணமில்லாதவன். अहं-நான், हरिः-விஷ்ணுவாக अस्मि-இருக்கிறேன். अहं-நான், हरः-பரமசிவன். (நான்) विधिः-பிரஹ்மா, अहमेव-நான்தான், तेषां-அவர்களுக்கு, कारणमस्मि-காரணமாக இருக்கிறேன்.

(தேவதைகளுக்குக் கொடுக்கப்படும்) ஹவ்யமும் நான். (பித்ருக்களுக்குக் கொடுக்கப்படும்) கவ்யமும் நான். விலக்க வேண்டியது, எடுத்துக் கொள்ளவேண்டியது என்ற எண்ணமற்றவன் நான். மஹாவிஷ்ணு நான், பரமேசுவரன் நான், பிரஹ்மாவும் நான்தான். இம்மூவர்களுக்கும் காரண மாயுள்ளதும் நான்தான். (143)

क्षालितकलुषभयोऽहं क्षपितभवक्लेशजालहृदयोऽहम् ।
क्षान्ताद्यक्षरसुघटितविविधव्यवहारमूलमहमेव ॥ १४४ ॥

க்ஷாளித கலுஷ பயோ஽ஹம் க்ஷபித பவக்லேஶ ஜால
ஹ்ருதயோ஽ஹம் ।
க்ஷாந்தாத்யக்ஷர ஸுகடிதவிவிதவ்யவஹார மூலமஹமேவ ।

अहं-நான், क्षालितकलुषभयः-கழுவப்பட்ட பாபத்தையும் பயத்தையும் உடையவன். अहं-நான், क्षपितभवक्लेशजाल-हृदयः-மனதில் இருந்த ஸம்ஸாரத்துன்பக் கூட்டத்தை அழித்தவன். क्षान्ताद्यक्षर-க்ஷகாரத்தைக் கடைசியிலும் அகாரத்தை முதலிலும் உள்ள அக்ஷரங்களால், सुघटित-நன்கு சேர்க்கப்பட்ட பதங்களாலும் வாக்யங்களாலும் ஏற்

படும், विविध-பலவிதமான, व्यवहारमूलं-வியவஹாரங்களுக்கு மூலகாரணம், अहमेव-நான்தான்.

பாபத்தையும் பயத்தையும் அலம்பி விட்டு விட்டவன் நான். ஸம்ஸாரத்தில் ஏற்பட்ட கிலேசக்கூட்டங்களைப் போக்கடித்துள்ள ஹ்ருதயத்தோடு கூடினவன் நான். "க்ஷ" என்பதை கடைசியாகவும் "அ" என்பதை முதலாவதாகவும் உள்ள அக்ஷரங்களினால் நன்கு ஏற்படும் பல விதமான வியவஹாரங்களுக்கெல்லாம் மூலமாயிருப்பது நானே. (144)

बहुभिः किमेभिरुक्तैरहमेवेदं चराचरं विश्वम् ।
शीकरफेनतरङ्गाः सिन्धोरपराणि न खलु वस्तूनि ॥ १४५ ॥

பஹுபி: கிமேபிருக்தைரஹமேவேதம் சராசரம் விச்வம் ।
ஶீகரபேனதரங்கா: ஸிந்தோரபராணி ந கலு வஸ்தூனி ॥

बहुभिः - அதிகமாக, एभिरुक्तैः - சொல்லப்பட்ட இந்த வார்த்தைகளால், किम्-யாது பயன்? चराचरं-ஜங்கமமாயும் ஸ்தாவரமாயுமுள்ள, इदं-இந்த, विश्वं-பிரபஞ்சம், अहमेव-நானே. शीकरफेनतरङ्गाः - திவலை, நுரை, அலை இவைகள், सिन्धोः - கடலைக்காட்டிலும், अपराणि वस्तूनि न खलु-வேறான பொருள்கள் இல்லையல்லவா!

இவ்விதம் வெகுவாக சொல்லுவானேன்? இந்த சராசரப் பிரபஞ்சமே நான்தான். திவலை, நுரை, அலை, இவைகள் ஸமுத்திரத்தைத் தவிர வேறு தனித்த வஸ்துக்கள் அல்லவே.

[இவ்வாறு 40 சுலோகங்களால் ஆத்மாவின் ஸார்வாத்ம்யத்தை, அதாவது எல்லாமாக ஆத்மா இருப்பதை பொதுவாகவும், விசேஷமாகவும் காட்டி கடைசியில் ஸகல பிரபஞ்சமும் நானே என்று முடிவு செய்துள்ளார். சில விடங்களில் விதி ரூபமாகவும், சில இடங்களில் நிஷேத ரூபமாகவும் காட்டப்பட்டிருக்கிறது. உதாஹரணமாக ஞானம், ஞேயம், ஞாதா எல்லாம் நான் என்று சொல்லி

உடனே இம் மூன்றுமல்லாத சுத்த ஸத்தையே நான் என்று கூறுகிறார். ஆகவே ஸகல பிரபஞ்சமும் ஆத்மாதான் என்று கூறுவதன் கருத்து இதுதான்: "உண்மையில் ஆத்மா ஒன்றே உள்ளது. இதைக்காட்டிலும் வேறாக ஒன்றுமே இல்லை. பிரபஞ்சமும் இதில் காணப்படும் பொருள்களும் வாஸ்தவமல்ல. வெறும் தோற்றம்தான்" நானே எல்லா பிரபஞ்சமும் என்ற வாக்யத்திற்கு என்னைத் தவிற வேறாக தனியாக பிரபஞ்சம் என்பது உண்மையில் கிடையாது என்று பொருள்.] (145)

குருவின் கருணை :—

(அ) இவ்வாறு தான் பெற்றுள்ள அத்வைத ஆத்மானுபவத்தை விவரித்துவிட்டு, இந்த அனுபவம் ஏற்படும்படி உபதேசம்செய்த ஸத்குருவின் மஹிமையை எடுத்துக் கூறுகிறார் :—

शरणं न भवति जननी न पिता न सुता न सोदरा नान्ये ।
परमं शरणमिदं स्याच्चरणं मम मूर्ध्नि देशिकन्यस्तम् ॥ १४६ ॥

ஶரணம் ந பவதி ஜநநீ ந பிதா ந ஸுதா ந ஸோதரா நாந்யே ।
பரமம் ஶரணமிதம் ஸ்யாத் சரணம் மம மூர்த்னி தேஶிகந்யஸ்தம் ॥

जननी-தாயார், शरणं-(ஸம்ஸார பயத்திலிருந்து) காப்பாற்றுபவளாக, न भवति-இருக்கவில்லை. पिता-தந்தையும், न-இல்லை, सुताः-தனயர்களும், न-இல்லை, सोदराः-ஸஹோதரர்களும், न-இல்லை, अन्ये-(இவர்களைத்தவிற) மற்றவர்களும், न-இல்லை मम-என்னுடைய, मूर्ध्नि-சிரஸ்ஸில் देशिकन्यस्तं-ஆசார்யரால் (அனுக்ரஹித்து) வைக்கப்பட்ட, इदं-இந்த, चरणं-ஸத்குருவின் திருவடிதான், परमं-உத்தமமான, शरणं-ரக்ஷகமாக, स्यात्-ஆகும்.

தாயார் சரணமாகாள், தகப்பனாரும் ஆகார், உடன் பிறந்தாரும் ஆகார், வேறு எவரும் ஆகார். குருநாதரால்

என் சிரஸ்ஸில் வைக்கப்பட்ட இந்த பாதமேதான் எனக்கு உத்தமமான சரணமாகும். (146)

आस्ते देशिकचरणं निरवधिरास्ते तदीक्षणे करुणा ।
आस्ते किमपि तदुक्तं किमतः परमस्ति जन्मसाफल्यम् ॥

ஆஸ்தே தேசிக சரணம் நிரவதிராஸ்தே ததீக்ஷணே கருணா।
ஆஸ்தே கிமபி ததுக்தம் கிமத: பரமஸ்தி ஜன்ம ஸாபல்யம் ॥

**देशिकचरणं**–ஸத்குருசரணாரவிந்தம் (ரக்ஷகமாக), **आस्ते**-இருக்கிறது. **तदीक्षणे**-அவருடைய பார்வையில், **निरवधिः**-எல்லையற்றதான, **करुणा**-காருண்யம், **आस्ते**-இருக்கிறது. **तदुक्तं**-அவரால் சொல்லப்பட்ட, **किमपि**-வர்ணிக்கமுடியாத சிறந்த உபதேசம், **आस्ते**-இருக்கிறது. **अतः परं**இவற்றைக் காட்டிலும் வேறு, **जन्मसाफल्यं**-பிறவிப்பயன், **किमस्ति**-என்ன இருக்கிறது?

குருநாதருடைய பாதம் இருக்கிறது. அவருடைய பார்வையில் எல்லையற்ற கருணை இருக்கிறது. ஏதோ அவர் சொன்ன உபதேசம் இருக்கிறது. இப்பிறவி ஸபலமென்பதற்கு இவைகளுக்குமேல் என்ன உண்டு? (147)

कारुण्यसारसान्द्राः काङ्क्षितवरदानकल्पकविशेषाः ।
श्रीगुरुचरणकटाक्षाः शिशिराः शमयन्ति चित्तसंतापम् ॥

காருண்ய ஸார ஸாந்த்ரா: காங்க்ஷித வர தான கல்பக விசேஷா:।
ஸ்ரீகுரு சரண கடாக்ஷா: சிசிரா: சமயந்தி சித்த ஸந்தாபம் ॥

**कारुण्यसारसान्द्राः**-கருணாரஸம் நிரம்பியதும், **काङ्क्षितवरदानकल्पकविशेषाः** - விரும்பிய வரங்களைக் கொடுப்பதில் சிறந்த கல்பகவிருக்ஷம் போன்றதும், **शिशिराः**-குளிர்ந்ததுமான, **श्रीगुरुचरणकटाक्षाः**-ஆசார்யபாதாளின் கடைக்கண் பார்வைகள், **चित्तसंतापं**-மனதிலுள்ள தாபத்தை, **शमयन्ति**-நிவர்த்தி செய்கின்றன.

காருண்யாரஸம் நிரம்பினதும், அபேக்ஷிக்கும் வரனைக் கொடுப்பதில் ஒருவித கல்ப விருக்ஷமானதும், குளுமை உள்ளதுமான ஸ்ரீ குரு சரணுளுடைய கடைக்கண் பார்வைகள் சித்தத்திலுள்ள தாபத்தை சமனம் செய்கின்றன.(148)

कवलितचञ्चलचेतोगुरुतरमण्डूकजातपरितोषा ।
शेते हृदयगुहायां चिरतरमेकैव चिन्मयी भुजगी ॥ १४९ ॥

கபளித சஞ்சல சேதோ குருதர மண்டூக ஜாத பரிதோஷா ।
ஶேதே ஹ்ருதய குஹாயாம் சிரதரமேகைவ சின்மயீ புஜகீ ॥

**कवलित**-விழுங்கப்பட்ட, **चञ्चल**-சஞ்சலமான, **चेतो**-மனமாகிற, **गुरुतर**-மிகப்பெரிய, **मण्डूक**-தவளையினுல், **जात**-உண்டான, **परितोषा**-ஸந்தோஷத்தை உடைய, **चिन्मयी**-சைதன்யரூபமான, **भुजगी**-பாம்பு, **एकैव**-தனித்து தான் ஒன்றுமட்டும், **हृदयगुहायां**-ஹிருதயமாகிற குகையில், **चिरतरं**-வெகுகாலம், **शेते**-படுத்துத்தூங்குகிறது.

சித்ஸ்வரூபமான பாம்பு சஞ்சலித்துக் கொண்டிருக்கும் மனம் ஆகிற நல்ல கனத்த தவளையை விழுங்கி விட்டதனுல் ஏற்பட்ட ஸந்தோஷத்துடன், ஹ்ருதயமாகிற குகையில் தனித்தேயிருந்து வெகுகாலம் படுத்துக்கொண்டு இருக்கிறது. (149)

मयि सुखबोधपयोधौ महति ब्रह्माण्डबुद्बुदसहस्रम् ।
मायामयेन मरुता भूत्वा भूत्वा मुहुस्तिरोधत्ते ॥ १५० ॥

மயி ஸுகபோதபயோதௌ மஹதி ப்ரஹ்மாண்ட
புத்புதஸஹஸ்ரம் ।
மாயாமயேன மருதா பூத்வா பூத்வா முஹுஸ்திரோதத்தே ॥

**महति**-பெரிய, **सुखबोधपयोधौ**-ஞானனந்த ஸாகரஸ்வரூபமான, **मयि**-என்னிடத்தில், **ब्रह्माण्डबुद्बुदसहस्रं**-ஆயிரக் கணக்கான ப்ரஹ்மாண்டமாகிற நீர்க்குமிழிகள், **मायामयेन**-

மாயாரூபமான, मरुता-காற்றினல், भूत्वा भूत्वा-உண்டாகி உண்டாகி, मुहुः-அடிக்கடி, तिरोधत्ते-மறைகிறது.

ஞானனந்தமாகிற பெரிய கடலான என்னிடத்தில் ஆயிரக்கணக்கான ப்ரஹ்மாண்டமாகிற நீர்க்குமிழிகள் மாயை என்ற காற்று காரணமாக உண்டாகி உண்டாகி அடிக்கடி மறைகின்றன. (150)

गुरुकरुणयैव नावा प्राक्तनभाग्यानुकूलमारुतया ।
दुःसहदुःखतरङ्गैस्तुङ्गः संसारसागरस्तीर्णः ॥ १५१ ॥

குரு கருணயைவ நாவா ப்ராக்தன பாக்யானுகூல
மாருதயா ।
துஸ்ஸஹ துக்க தரங்கைஸ்துங்க: ஸம்ஸார ஸாகர
ஸ்தீர்ண: ॥

प्राक्तनभाग्यानुकूलमारुतया-முன்னல் ஸம்பாதித்துள்ள பாக்யமென்னும் அநுகூலக் காற்றுடன்கூடிய, गुरुकरुणया-குருவின் கிருபை என்னும், नावा एव-தோணியினலேயே, दुस्सहदुःखतरङ्गैः-பொறுக்க முடியாத துன்பங்களாகிற அலைகளால், तुङ्गः-உயரமான, संसारसागरः-ஸம்ஸாரமென்னும் ஸமுத்திரம், तीर्णः-தாண்டப்பட்டு விட்டது.

ஸஹிக்க முடியாத துக்கமாகிற அலைகளால் உயர்ந்து இருக்கும் ஸம்ஸாரமாகிற ஸமுத்திரம் முன் ஸம்பாதித்திருந்த பாக்யமாகிற அனுகூலமான காற்றுடன் கூடிய குருநாதரின் கருணை யென்ற தோணியின் உதவியால் தாண்டப்பட்டுவிட்டது. (151)

सति तमसि मोहरूपे विश्वमपश्यं तदेतदित्यखिलम् ।
उदितवति बोधभानौ किमपि न पश्यामि किन्विदं चित्रम् ॥

ஸதி தமஸி மோஹரூபே விச்வமபச்யம் ததேததித்யகிலம் ।
உதிதவதி போதபானௌ கிமபி ந பச்யாமி கிம்ந்விதம்
சித்ரம் ॥

**मोहरूपे** - அவிவேக ரூபமான, **तमसि**-இருட்டு, **सति**-இருக்கும்பொழுது, **तत् एतत् इति**-அது, இது என்ற, **अखिलं विश्वं**-பிரபஞ்சம் எல்லாவற்றையும், **अपश्यं**-பார்த்தேன். **बोधभानौ**-ஞானமாகிற சூரியன், **उदितवति**-உதயமான பிறகு **किमपि**-ஒன்றையும், **न पश्यामि**-பார்க்கவில்லை. **इदं**-இது, **किंनु चित्रम्** - என்ன ஆச்சர்யம் !

மோஹ ரூபமான இருட்டு இருக்கும்போது அது, இது, என்ற பிரபஞ்சம் எல்லாவற்றையும் பார்த்தேன். ஞானமாகிய ஸூர்யன் உதயமானபிறகு ஒன்றையும் நான் பார்க்கவில்லை. இது விசித்திரம் அல்லவா !

[இரவில் வெளிச்சமில்லாத இருட்டில் ஒரு பொருளையும் நாம் பார்க்க முடிகிறதில்லை காலையில் சூரியன் உதயமாகி விட்டால் இருட்டு விலகி விடுகிறது. எல்லாப்பொருள்களையும் சூரிய வெளிச்சத்தால் பார்க்கமுடிகிறது. இருட்டில் பார்க்க முடியாததையும் வெளிச்சத்தில் தெரிவதையும் தான் உலகில் கண்டிருக்கிறோம். ஆனால் இங்கோ இருட்டில் எல்லாம் தெரிகிறது வெளிச்சத்தில் ஒன்றும் தெரிவதில்லை. உலகவழக்கத்திற்கு நேர் எதிரிடையாக இருப்பதால் இது ஆச்சர்யமான விஷயம். அக்ஞானம் என்ற இருட்டு உள்ள வரை அது ப்ரஹ்மத்தை மறைத்து பிரபஞ்சத்தைத் தோன்றச்செய்து கொண்டிருந்தது. நாமும் அதைப் பார்த்துவந்தோம். ப்ரஹ்மஞானம் ஏற்பட்டதும் அக்ஞானம் அழிந்து விடுகிறது அதனால் அக்ஞானத்தின் கார்யமான பிரபஞ்சம் ஒன்றும் தோன்றுவதில்லை.] (152)

முடிவுரை :—

इत्यात्मबोधलाभं मुहुरनुचिन्त्य प्रमोदमानेन ।
प्रारब्धकर्मणोऽन्ते परं पदं प्राप्यते हि कैवल्यम् ॥ १५३ ॥

இத்யாத்மபோத லாபம் முஹுரநுசிந்த்ய ப்ரமோதமானேந ।
ப்ராரப்த கர்மணோऽந்தே பரம் பதம் ப்ராப்யதே ஹி
கைவல்யம் ॥

**इति**-இவ்வாறு, **आत्मबोधलाभं**-ஆத்மஞானம் கிடைத்ததை, **मुहुः**-அடிக்கடி, **अनुचिन्त्य**-நினைத்து நினைத்து, **प्रमोदमानेन**-ஸந்தோஷமடைகிற ஜீவன் முக்தனால், **प्रारब्धकर्मणः**-பிராரப்தகர்மாவின், **अन्ते**-முடிவில், **परं पदं**-உத்தம நிலையான, **कैवल्यं**-மோக்ஷம், **प्राप्यते**-அடையப்படுகிறது.

இவ்விதமாக ஆத்மஞானத்தை யடைந்ததைப்பற்றி அடிக்கடி நினைத்து நினைத்து ஆனந்தித்துக்கொண்டிருப்பவனால் பிராரப்த கர்மாவின் முடிவில் உத்தம நிலையான கைவல்யம் அடையப்படுகிறது. (153)

**मोहान्धकारहरणं संसारोद्वेलसागरोत्तरणम् ।**
**स्वात्मनिरूपणमेतत् प्रकरणमन्तर्विचिन्त्यतां सद्भिः ॥ १५४ ॥**

மோஹாந்தகார ஹரணம் ஸம்ஸாரோத்வேல
ஸாகரோத்தரணம் ।
ஸ்வாத்ம நிரூபணமேதத் ப்ரகரணமந்தர்விசிந்த்யதாம்
ஸத்பி: ॥

**मोहान्धकारहरणं**-மோஹமென்னும் இருட்டைப்போக்குகின்றதும், **संसारोद्वेलसागरोत्तरणं**-ஸம்ஸாரமென்னும் கரைபுரண்டு வருகிற ஸமுத்ரத்தைத் தாண்டிவைக்கிறதுமான, **एतत्**-இந்த, **स्वात्मनिरूपणं**-தனது ஆத்மஸ்வரூபத்தை நன்கு எடுத்துக்காட்டுகிற 'ஸ்வாத்ம நிரூபணம்' என்னும் **प्रकरणं**-பிரகரணமானது, **सद्भिः**-ஸாதுக்களால், **अन्तः**-மனதிற்குள், **विचिन्त्यताम्**-நன்கு சிந்தனம் செய்யப்படட்டும்.

மோஹமாகிற இருட்டைப் போக்கக்கூடியதும், ஸம்ஸாரமாகிற கரை புரண்ட ஸமுத்திரத்தைத் தாண்டி வைக்கக்கூடியதும், தன்னுடைய ஆத்மாவை நிரூபணம் செய்து கொடுப்பதுமான இந்த பிரகரணம் ஸத்துக்களால் தனக்குள் அனுசிந்தனம் செய்யப்படட்டும். (154)

---

## ॥ श्लोकानुक्रमणिका ॥